அஶரீரி வாக்யத்தாலும ஸம்பாதிபாநமான விவருடைய ஜ்ஞாநாதிக்யத்தாலும, ஸந்தேஹமற்று, வைதிகாக்ரேஸரர்க்குச் செய்யக்கடவ ப்ராஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்தாரிறே.

231. அவ — அநந்தரம், ஜந்மாத யுத்க்ருஷ்டரான ருஷிகள் தத்பக்ருஷ்டன் பக்கலிலே தர்மஶ்ரவணம் பண்ணினபடியை யருளிச்செய்கிறார்.

மூலம் — 231 ருஷிகள் தர்மவ்யாதன் வாசலிலே துவண்டு தர்மஸந்தேஹங்களை ஶமிப்பித்துக் கொண்டார்கள்.

வ்யா:—(ருஷிகள) என்று துடங்கி. சதுர்வேததரராய ஸர்வோத்க்ருஷ்டராயிறே ருஷிக ளிருப்பது; ஏவம்பூதரானவர்கள், வேத ஶ்ரவண யோக்யதையில்லாத குலத்திலே பிறந்துள்ளவனுய், ஜாதி ஶ்ம்ருதியோடே ஜாதனுகையாலே பூர்வஜந்மஸித்தமான ஜ்ஞாநத்தில ப்ரம்ஶ மில்லாமையாலும் மாதாபித்ருஶுஶ்ரூஷா விஶேஷத்தாலும ஸகல தர்மஸூக்ஷ்ம ஜ்ஞாநனுயிருக்கும் தர்மவ்யாதன் வாசலிலே சென்று, மாதாபித்ருஶுஶ்ரூஷைகபரனு யிருக்கிறவவ னவஸரம பார்த்துத துவண்டு ஜ்ஞாதவ்யங்களான தர்மங்களில தங்களுக்கு * ஸந்திக்தங்களானவை யெல்லா மவன்பக்கலிலே கேட்டு, அதில ஸந்தேஹங்களைப போக்கிக்கொண்டார்க ளென்கை.

513 "கஶ்சித்த்விஜாதிப்ரவரோ வேதாத்யாயீ தபோதநஃ - தபஸ்வீ தர்ம ஶீலஶ்ச கௌஶிகோநாம பாரத ஸாங்கோபநிஷதாந வேதாநதீதே த்விஜஸத்தமஃ - ஸவ்ருக்ஷமூலே கஸ்மிம்ஶ்சித் வேதாநுசசாரயந ஸ்திதஃ - உபரிஷ்டாச்ச வ்ருக்ஷஸ்ய வலாகா ஸந்யலீயத- தயாபுரீஷமுத்ஸ்ருஷ்டம் ப்ராஹ்மணஸ்ய ததோபரி" என்று துடங்கி - கௌஶிகனென்று பேரையுடையனுய் அதீதஸாங்க ஸஶிரஸ்க ஸகல வேதத்தையுடையனு யிருப்பானொரு ப்ராஹ்மணோத்தமன், ஒரு வ்ருக்ஷ மூலத்திலே வேதங்களையு முச்சரித்துக்கொண்டு நிற்கச்செய்தே, அதின்மேலே யிருந்ததொரு கொக்கு எச்சமிட்டது. தன் மார்பிலே வந்து பட்டவாறே க்ருத்தனுய், பார்த்த பார்வையிலே யது படடுவிழ, அத்தைக்கண்டு, தபதசித்தனுய்க் கனக்க ஶோகித்து, "ராகத்வேஷ பலாத்க்ருதராய்க்கொண்டு அக்ருத்யத்தைச் செய்தோம்" என்று பலகாலும் சொல்லிக்கொண்டு, ஆஸந்ந

* ஸந்திக்தங்கள் - சந்தேகங்கள்.

மானதொரு க்ராமத்திலே பிக்ஷார்த்தமாகப்போய், ப்ரதமமொரு க்ருஹத்திலே சென்று, "பிக்ஷாம்தேஹி" என்று யாசித்தவளவிலே, அந்த க்ருஹிணியானவள், "நில்லும், வருகிறேன்" என்று சொல்லி, கார்யாந்தராதிகளைப் பண்ணி பிக்ஷைகொண்டு வருவதாக உத்யோகியா நிற்கச்செய்தே, பர்த்தாவானவன அதீவக்ஷுதார்த்தனாய் வந்துபுகுர, அவள் பதிவ்ரதையாகையாலே பிக்ஷை கொண்டுவருகிறத்தை விட்டு பாத்யாசமநீயாஸந ப்ரதாநாதிகளாலே அவனை ஶுஶ்ரூஷிக்கிற ப்ரகாரத்திலே ப்ராஹ்மணன் நிற்கிறத்தை மறந்து, நெடும்போது நின்று, பின்னை யவன் நிற்கிறத்தைக் கண்டு நடுங்கி, பிக்ஷை கொண்டுவந்தவளவிலே, "என்னை நிற்கச்சொல்லி இத்தனை போது நீ புறப்படாதிருப்பானென்" என்று அவன் குபிதனானாறே; அவளவனை ஸாந்த்வநம் பண்ணி, "இத்தைப் பொறுக்க வேணும்" என்று வேண்டிக்கொண்டு, "நான் 'பர்த்தாவே தெய்வம்' என்றிருப்பா ளொருத்தி, அவனிப்போதுவருகையாலே தச்சுஶ்ரூஷை பண்ணிநின்றேனித்தனை" என்ன; "உனக்கு பர்த்தாவையன்றோ ஸத்கரிக்க வேண்டுவது, ப்ராஹ்மணரளவில கௌரவ ப்ரதிபத்தி யில்லையே!" என்று வ்யங்க்யமாகச் சொல்லி, "க்ருஹ தர்மத்திலே வர்த்திக்கிற நீ ப்ராஹ்மணரை யிப்படி யவமதி பண்ணலாகாது காண்" என்ன; "நானொருக்காலும் ப்ராஹ்மணரை யவமதி பண்ணேன், ப்ராஹ்மணருடைய வைபவமெல்லாம் நன்றாக வறிவன்" என்று பரக்கச் சொல்லிக்காட்டி, "இவ்வபராதத்தைப் பொறுக்கவேணும், 'பர்த்தாவே தெய்வம்' என்றிருக்கையாலே தச்சுஶ்ரூஷையிலே ப்ரவணையாய்நின்றே னித்தனை, என்னுடைய பதிஶுஶ்ரூஷையினுடைய பலத்தைப் பாரீர், உம்முடைய ரோஷத்தாலே அந்தக் கொக்கு யாதொருபடி தக்தமாய்த்து அதுவு மெனக்கு விதிதங் காணும்" என்று சொல்லி, 514 "க்ரோதஶ்ச ஶத்ருஶ் ஶரீரஸ்த்தோ மநுஷ்யாணாம் த்விஜோத்தம - ய: க்ரோத மோஹௌ த்யஜதி தம் தேவா ப்ராஹ்மணம் விது:" என்று துடங்கி - "காமக்ரோதாதிகள் ப்ராஹ்மணனுக் காகாது, ஸத்யார்ஜவாதிக ளுண்டாக வேணும்" என்று விஸ்தரேண தான் ப்ரதிபாதித்து, 515 "பவாநபிச தர்மஜ்ஞஸ் ஸ்வாத்யாய நிரதஶ்ஶுசி: - ந து தத்வேந பகவந் தர்மாந் வேத்ஸீதி மே மதி: - மாதாபித்ருப்யாம் ஶுஶ்ரூஷுஸ் ஸத்யவாதீ ஜிதேந்த்ரிய: - மிதிலாயாம் வஸந் வ்யாதஸ் ஸ தே தர்மாந் ப்ரவக்ஷ்யதி - தத்ர கச்சஸ்வ பத்ரந்தே யதா காமம் த்விஜோத்தம - வ்யாத: பரமதர்மாத்மா ஸந்தேஹச்சேத்ஸ்யதி ஸம்ஶயாந்" என்று-

"நீரும தாமஜஞர், வேதாதயயந நிரதர், ஶாநதர், ஆயிருககசசெய
தேயும, தாமஙகளை யுள்ளபடி யறியீா என்றெனககு நினைவு, மாதா
பிதருஶுஶ்ரூஷாவாய ஸதயவாதியாய ஜிதேநதரியனையக்கொண்டு
மிதிலையிலே யிருககிற வயாதன உமககு தாமஙகளைச சொலலககட
வன் அஙகே போம, உமககு நனமை யுணடாவதாக, பரமதாமாத்
மாவா யிருககிற அநத வயாதன வேணடினபடி யுமமுடைய ஸம்
ஶயஙகளை யெலலாம போககககசடவன்" என்ன ; அவன பரீதனாய்
இவளைக் கனகக ஸ்தோதரம பணணி, அஙகுநின்றும மிதிலையிலே
சென்று, 516 "பஞசகாநி பவித்ராணி ஶிஷ்டாசாரேஷு நித்யதா -
ஏதந மஹாமதே வயாத பரப்ரவீஹி யதா ததம்" என்று - "ஶிஷ்
டாசாரஙகளிலே 'யெபபோதுமுளவாயிருககிற பவிதரஙகளஞ்
மெவை,' மஹாமதியானவனே இதனைச சொலலவேணும" என்ன ;
517 "யஜ்ஞோ தாநம தபோ வேதாஸ ஸதயஞச தவிஜஸத்தம -
பஞசைதாநி பவிதராணி ஶிஷ்டாசாரேஷு நித்யதா" என்று -
யஜஞமும் தாநமும தபஸ்ஸும் வேதஙகளும் ஸத்யமுமாகிற பவித்
ரஙகளானவிவை யைநதும் ஶிஷ்டாசாரங்களிலே யெபபோது
முளவாயிருக்கும" என்று இதயாதியாலே அவனித்தை யுபதேஶிகக,
இபபடி மேன்மேலும தனககு ஸமஶயமானவை யெல்லா மிவன
கேடககேடக, உபதேஶமுகததாலே ஸகலதாம ஸம்ஶயங்களையும்
தர்மவயாத னறுதத பரகாரததை தாமபுத்ரர்ககு மாாக்கண்டேய
னநுக்ரஹிததாக ஆரணய பர்வததிலே இருநூறு மதயாயந
துடஙகி பதின்மூன் றதயாயததாலே பரககச் சொல்லபபட்டதிறே.
இன்னமு மிபபடி பலரு மிவன் வாசலிலே துவண்டு தர்ம ஸநதே
ஹஙகள் ஶமிபபிததுக கொண்டமை பலவிடங்களிலு முண்டு.

இத்தால - ஜநமாத்புதக்ருஷ்டரானவர்களுக்கு ததபக்ருஷ்ட
ரானவாகள் ஜஞாநாதிகராயிருக்கில அவாகள் வாசலிலே துவண்டு
ஜஞாதவயாாததஙகள் கேடககுறைவிலலை யென்னுமிடம் காட்டப
படடது.

232. அவ:—அநநதரம், 518 "யத்யதாசரதி ஶ்ரேஷ்டஃ" என்று
கருஷ்ண ஞசரிததபடியை யருளிச்செயகிறார்.

**மூலம்:—232 க்ருஷ்ணன் பீஷ்மத்ரோணாதி க்ருஹங்
களை விட்டு ஸ்ரீவிதுரர் திருமாளிகையிலே
யமுதுசெய்தான்.**

வ்யா —(க்ருஷ்ணன்) என்று துடங்கி. தாம ஸமஸ்தாபநார்த்த மாக வவதரித்தருளி, 519 "லோக ஸங்கர ஹமேவாபி ஸம்பஶ்யந் கர்த்து மாஹஸி" என்று - "ஜ்ஞாநியானாலும் லோக ஸங்க்ரஹத் தைப் பார்த்து வர்ணாஶ்ரம தர்மங்களை நன்றாக வநுஷ்டிக்கவேணும்" என்று உபதேஶித்ததும், 520 "யதி ஹ்யஹம் நவர்த்தேயம் ஜாது கர் மண்யதந்த்ரித꞉ - மம வர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா꞉ பார்த்த ஸர் வஶ꞉" என்று - "ஒருக்கால் கர்மத்தில் சோம்பாதே நான் பர்வாத தியேனாகில் மநுஷ்யரெல்லா மென்வழியைப் பின்செல்லும்" என்ற படியே பரார்த்தமாகத் தான் குறிக்கொண் டநுஷ்டித்தும் போரும் ஸ்வபாவனிறே க்ருஷ்ணன், ஏவம்பூதனானவன் ஸ்ரீதூதெழுந் தருளினபோது, 521 "பீஷ்மத்ரோணா வதிக்ரம்ய மாஞ்சைவ மது ஸூதந - கிமர்த்தம் புண்டரீகாக்ஷ புக்தம் வ்ருஷள போஜநம்" என்னும்படி - உத்க்ருஷ்ட வர்ண வருத்தராய இங்கே யெழுந்தரு ளுவரென்று பார்த்துக்கொண்டிருந்த பீஷ்மாதிகளுடைய க்ருஹங் களை யுபேக்ஷித்து, வர்ணத் யுத்கர்ஷ ரஹிதராய அத்தாலே இங்கே யெழுந்தருளுவரெனனும் நினைவுமற்றிருந்த ஸ்ரீவிதுரர் திருமாளிகை யிலே ஸாதரமாகச் சென்று புக்கு, 522 "ஸம்ப்ரமைஸ் துஷ்ய கோவிந்த ஏதந் ந꞉ பரமம் தநம்" என்று - பக்திபரவஶரான வவர் பண்ணின ஸம்ப்ரமங்களை யெல்லாங் கண்டுகந்து, 523 "விதுராந் நாநி புபுஜே ஶுசீநி குணவந்தி ச" என்கிறபடியே - அஹங்காரோப ஹத மல்லாமையாலே பரமபாவநமாய், பக்த்யுபஹ்ருத மாகை யாலே பரமபோக்யமாயிருக்கிற அந்நத்தை, அந்த பாவநத்வ போக்ய த்வங்க ளடியாக அத்யாதரம் பண்ணி யமுதுசெய்தானிறே.

233. அவ—ஏதத்பூர்வாவதாரத்திலும் இப்படி யநுஷ்டித்த ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

## மூலம்:—233 பெருமாள் ஸ்ரீஶபரி கையாலே யமுது செய்தருளினார்.

வ்யா:—(பெருமாள்) என்று துடங்கி. அதாவது - ரகுகுல திலகராய் ஆசார பரதந்த்ரரான பெருமாள், 524 "ஶபர்யா பூஜித꞉ ஸம்யக் ராமோ தஶரதாத்மஜ꞉" என்னும்படி - வேடுவிச்சியாய் வைத்தே குருஶுஶ்ரூஷையிலே பழுத்து ஜ்ஞாநாதிகையாய், தன் னுவுக் கினியதாயிருந்த பல மூலாதிக ளெல்லா மிங்குத்தைக்கு என்று ஸஞ்சயித்துக்கொண்டு வரவுபார்த்திருந்த ஸ்ரீஶபரி, தன் னுதாரநுகுணமாகத் தன் கையாலே யமுதுசெய்யப்பண்ண, அதி

ஸந்துஷ்டரா யமுதுசெய்தா ரெனகை. இத்தால - அபிஜநாதிக ளாலவரு மபிமாநகநதமற்ற ஜ்ஞாந ப்ரேமாதிகருடைய வபிமாந ஸ்பாஸமுள்ளவை ஆதமகுணக தாஸிகளான விஶேஷஜ்ஞாகரு அதீவபாவந பேர்க்யுங்களா யிருக்கு மெனனுமிடம காட்டப்பட்டது.

234. அவ:—இப்படி ஸ்ரீராமாயண மஹாபாரத ஸித்தமான ஶிஷ்டாசாரங்களாலே பாகவத வைபவத்தை ப்ரகாஶிப்பித்தார் கீழ்; இன்னமு மிவவாத்தவிஷயமாக பூர்வாசார்ய வசநத்தை ஸ்மரிப்பிக்கிருர்.

## மூலம் —234 மாறனேரிநம்பி விஷயமாக பெரியநம்பி உடையவர்க் கருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.

வ்யா.—(மாறனேரி நம்பி) என்று துடங்கி. அதாவது - அபிமாந ஹேதுவான ஜந்ம வ்ருத்தாதிக ளின்றிக்கே ஆளவந்தார ஸ்ரீ பாதத்தையுடையராய அத்யாத்மஜ்ஞாந பரிபூர்ணரா யிருக்கிற மாறனேரி நம்பி, தம்முடைய வந்திம தஶையிலே, "ஆளவந்தா ரபிமாநித்தருளின வித்தேஹத்தை ப்ராக்ருதிபந்துக்கள் ஸ்பர்ஶிக்கில செய்வதென்!" என்று அதிஶங்கை பண்ணி, ஸப்ரஹ்மசாரிகளான பெரியநம்பியைப் பார்த்து, "புரோடாஶத்தை நாய்க்கிடாதேகிடீர்" என்றருளிச்செய்து திருநாட்டுக்கெழுந்தருள; பெரிய நம்பியும், அப்படியே பிறர்கையில் காட்டிக்கொடாதே தாமே பள்ளி படுத்துவந் தெழுந்தருளியிருக்க; இத்தை உடையவர் கேட்டருளி, பெரியநம்பி ஸ்ரீபாதத்திலே வந்து, "ஜீயா, மர்யாதை கிடக்கக் காரியஞ் செய்யவேண்டாவோ, தேவரீர் செய்தருள வேண்டிற்றே", என்ன; * "ஆளிட்டந்தி தொழுவோ நான் பெருமாளிற்காட்டி லுத்கருஷ்ட்டரே, இவர் பெரியவுடையாரிற்காட்டி லபக்ருஷ்ட்டரோ, பயிலுஞ்சுடரொளி நெடுமாற்கடிமை கடலோசையோபாதியோ, ஆழ்வாரருளிச்செய்த வார்த்தத்தைச் சிறிது குறையவாகிலு மாசரிக்கவேண்டாவோ" என்றருளிச்செய்த வார்த்தை.

235. அவ:—இனி, பாகவத ஜந்மாதி ஶோதகயதா கதநபூர்வகமாக, அபாகவதோத்கர்ஷ நிந்தயத்தையை ப்ரகாஶிப்பிக்கிருர்.

## மூலம்—235 "ப்ராதுர் பாவைஃ" இத்யாதி.

---

* ஆளிட்டந்திதொழுகை - ஸந்த்யாவந்தநத்தை யொருத்தரைக்கொண்டு பண்ணுவிக்கை.

வ்யா:—("பாரதுர் பாவைः") இதயாதி என்று. 525 "பாராதுரபா வைஸ ஸ~ரநர ஸமோ தேவதேவஸ தீயா ஜாதயா வ்ருதஸைர பிச குணதஸ் தாதருபோராநாதர காஹா - கிநது ஸ்ரீமத புவநபவந தரா ணதோநயேஷு~ விதயா வருதத பராயோ பவதி விதவா கலபகலபः பரகாஷः" இததால - அயாவறு மமராக ளதிபதியானவன் பராதுர பாவஙகளாலே ஸ~ர நர ஸஜாதயஞகா நிறகும, ததீயரும ஜாதி யாலும் வ்ருததஙகளாலும குணததாலு மபபடி இதர ஸமரா யிருப பர்கள், இதில காரைஹயிலலே, ஶலாகைகயே யுள்ளது, உபயரு மிப படி நிறகிறது இநத லோகரக்ஷண நிமிததமாக, இனி அபாகவதா பக்க லுண்டான விதயா வருததபாஹு~ள்ய ரூபமான வுத்கர்ஷம் விதவாலஙகாரமபோலே நிநதயமாகா நினறதென்கிறது.

236. அவ —பாகவதாக ளன்றென்று அவாகளுக குண்டான வேதவித்யாதிகள் வயாததமாமோவென்ன ; அபபடி பரமாணம் சொலலாநின்றதிறே யென்கிறுா.

மூலம்:—236 "பாகவதனன்றிக்கே வேதார்த்த ஜ்ஞா நாதிகளை யுடையவன் குங்குமஞ் சுமந்த கழுதையோபாதி" என்று சொல்லா நின்றதிறே.

வயா.—(பாகவத னன்றிக்கே) என்று துடஙகி. அதாவது - 526 "சதுர்வேத தரோ விபரோ வாஸு~தேவம நவிநததி - வேத பார பராகராநதஸ் ஸவை பராஹமண காதபः" என்று - வேத தாதபர்ய மரன பகவத ஜ்ஞாநாதிக ளிலலாமையாலே. பாகவதனன்றிக்கே வேதாதயயநதோடே அதில ஸதூலார்தத ஜ்ஞாநாதிகளையுடை யனு யிருக்குமவன், போகிகளா யிருபபாா விரும்பும் பரிமள தரவ்ய மான குஙகுமததைச் சுமநது திரியாநிற்கசசெய்தே அதின் வாசி யறியாத கழுதைபோலே, பூர்வோததர பாகஙகளாலே ஆராதந ஸ்வரூபத்தையும் ஆராத்ய ஸ்வரூபத்தையும் ப்ரதிபாதியாநின்று கொண்டு பகவதேகபரமா யிருககிற வேதமாகிற விலக்ஷண வஸ்து பாரததைக் * கினியச சுமநதுகொணடிருககசசெய்தே அதின் சுவடறியாத பராஹ்மணகழுதை யென்று வேதோபபருஂஹண மான பரமாணம சொல்லாநின்றதிறே யென்கை.

237. அவ:—பகவத் ஸம்பந்த ரஹிதமான ஜநமாதிகள் ஸத் கர்ஹிதமென்னுமத்தை தர்ஶிபபித்தார் கீழ் பகவத் ஸம்பநத ஸஹித

* கினிய - நெககிபோகும்படி.

மான திர்யகாதி ஜந்மமும ஸத்பாத்ரமென்னுமத்தை தர்ஸிப்பிக்கிறார் மேல.

**மூலம் —237 ராஜாவான ஸ்ரீகுலஶேகரப்பெருமாள் திர்யகஸ்தாவர ஜந்மங்களை யாஶைப்பட்டார்.**

வ்யா —(ராஜாவான) என்று துடங்கி. அதாவது - த்விதீய வர்ணரான வேற்றத்தையுடைய ஸ்ரீகுலஶேகரப்பெருமாள், திர்யக ஸ்தாவர ஜந்மங்களானவை, 527 "வாசிகை: பக்ஷி ம்ருகதாம்" இத்யாதிகளாலே பாபயோநிகளாகச் சொல்லப்பட்டாநிற்கச்செய்தே, 528 "வேங்கடத்துக் கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே" 529 "மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே" 530 "செண்பகமாய் நிற்கும் திருவுடையே னாவேனே" 531 "தம்பகமாய் நிற்கும் தவமுடையே னாவேனே" என்று - திருமலையாழ்வாரோடு ஸம்பந்தமுடைய திர்யக ஸ்தாவர ஜந்மங்களைப் பெறுப்பேறாக வாசைப்பட்டா ரென்றபடி.

238. அவ —இப்படி யாசைப்பட்டவளவன்றிக்கே, தாழ்ந்த ஜந்மத்தை யாஸ்த்தாநம் பண்ணினவர்களை யருளிச்செய்கிறார்-

**மூலம் :—238 ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரும், திருமகளாரும், கோப ஜந்மத்தை யாஸ்த்தாநம் பண்ணினார்கள்.**

வ்யா —(ப்ராஹ்மணோத்தமரான) என்று துடங்கி. அதாவது- "இனி இதுக்குமேலில்லை" என்னும்படியான வர்ணத்திலே யவதரித்து வித்யா மாஹாத்ம்யாதிகளாலே தஜ்ஜாதீய ஸகலோத்தமரான பெரியாழ்வாரும், வேதப்பயன் கொள்ளவல்ல வவர்தம்மைப்போலே பேதைப் பருவத்திலே வேத ஸாரார்த்தவித்தமையா யிருக்கும் அவர் திருமகளான வாண்டாளும், ஸ்ரீக்ருஷ்ணாவதாராநுபவத்திலபிநிவேஶாதிஶயத்தாலே, 532 "மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய்" 533 "என் மகன் கோவிந்தன்" 534 "பன்னிரு திங்கள் வயிற்றிற்கொண்ட வப்பாங்கினால்" இத்யாதியாலும், 535 "ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்" 536 "நாமும் நம் பாவைக்கு" 537 ஆய்க்குலத்து துன்றன்னைப் பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்" இத்யாதியாலும் தானவளாகப் பேசும்படி, தாங்கள் வதரித்த வர்ணத்துக்கு மூன்றாம் வர்ணமாகையாலே * தண்ணிதா யிருந்த

* தணணிது - நிக்ருஷ்டம் = தாழ்ந்தது.

துள்ள அறிவொன்றுமில்லாத கோபஜநமத்தைப் புரையறவேறிட்டுக்கொண்டார்களென்கை.

239. அவ:—இப்படி யாசைப்படுகையும் ஆஸ்தாநம்பண்ணுகையுமொழிய, கந்தல் கழிந்தால் ஸ்வரூபமிருக்கும்படிதானென்னென்ன வருளிச்செய்கிறார். (கந்தல்கழிந்தால்) என்று துடங்கி. அன்றிக்கே, இப்படி விஶிஷ்டவேஷப்ரயுக்தமான தாரதம்யாவஸ்தைகளின்றிக்கே கந்தல் கழிந்தால் ஸகலாத்மாக்களுக்கும் வருமவஸ்தைதானேதென்ன வருளிச்செய்கிறாராகவுமாம்.

மூலம்:—239 கந்தல் கழிந்தால் ஸர்வர்க்கும் நாரீணாமுத்தமையுடைய வவஸ்த்தை வரக்கடவதாயிருக்கும்.

வ்யா:—(கந்தல் கழிந்தால்) இத்யாதி. அதாவது - ஆத்மஸ்வரூபத்தை யுள்ளபடி ப்ரகாஶியாதபடி அநாதிகால மபிபவித்துப் போந்த வந்தேறியான அவித்யாதி தோஷம் பகவத் ப்ரஸாத விஶேஷத்தாலே பின்னுட்டாதபடி ஸவாஸநமாகப் போனால், ஸகலாத்மாக்களுக்கும், 538 "ஸர்வ லக்ஷண ஸம்பந்நா நாரீணாமுத்தமா வதூ:" என்கிறபடியே - ஸ்த்ரீத்வ லக்ஷணங்களெல்லாவற்றாலும் குறைவற்று ஸ்வேதர ஸகல ஸ்த்ரீணாமுத்தமையாயிருக்கும் பெரிய பிராட்டியாருடைய நிலை தன்னடையே வரக்கடவதாயிருக்குமென்கை.

240. அவ:—அதெங்ஙனேயென்னு மபேக்ஷயிலே யத்தையுபபாதிக்கிறார்.

மூலம்:—240 ஆறு ப்ரகாரத்தாலே பரிஶுத்தாத்மஸ்வரூபத்துக்கு தத்ஸாம்ய முண்டாயிருக்கும்.

வ்யா:—(ஆறு ப்ரகாரத்தாலே) என்று துடங்கி. அதாவது - அநந்யார்ஹஶேஷத்வம், அநந்யஶரணத்வம், அநந்யபோக்யத்வம், ஸம்ஶ்லேஷத்தில் தரிக்கை, விஶ்லேஷத்தில் தரியாமை, ததேகநிர்வாஹ்யத்வமாகிற ஆறு ப்ரகாரத்தாலே, நிஶ்ஶேஷநிவ்ருத்தாவித்யாதிதோஷதயா பரிஶுத்தமான வாத்மஸ்வரூபத்துக்கு, ப்ரகாரஷட்க பரிபூர்ணையான பிராட்டியோடு ஸாம்யம் நைஸர்கிகமாக வுண்டாயிருக்குமென்கை. இந்த ஸாம்ய ஷட்கத்தை நினைத்திறே, 539

"கடிமாமலாபபாவை யொபபாள்" என்னுமாழ்வா ரருளிசசெய் தது. ஆக, இவவிரண்டு வாகயமும பராஸங்கிகம்.

241. அவ·—இனி, அவாக ளுதகருஷ்ட்டமான ஜநமங்களை யுபேக்ஷிதது நிகருஷ்ட்டமான ஜநமஙகளை விருமபுவா னென் னென்ன வருளிசசெயகிறுா.

**மூலம்·—241 த்ருஷ்டத்தி லுத்கர்ஷ மஹங்காரத் தாலே ; அத்ருஷ்டத்தி லுத்கர்ஷ மஹங் கார ராஹித்யத்தாலே.**

வயா·—(தருஷ்டத்தில) என்று துடங்கி. அதாவது - ஆபிஜாத் யாதிகளும் ஐஶ்வர்யமுமாகிற த்ருஷ்டபுருஷாரத்ததி லொரு வனுக குண்டா முயாததி, விஶ்வாமிதராதிகளைபபோலே தான்நின்ற நிலைக்குமேலே உதகாஷம் தேடப்பண்ணு மஹங்காரததாலே யுண டாம் ; மோக்ஷதவாதிகளும் கைஙகாய ஸம்பததுமாகிற அதருஷட புருஷாரததத்தில் ஒருவனுக்குண்டா முயர்ததி, இவற்றினுடைய வபிவருத்தியி லாஸையாலே நிலைகருநிலை தாழப போம்படியான வஹங்கார ராஹித்யததாலே யுண்டாமென்கை.

242. அவ—இவ்வஹஙகார ததராஹிதயஙக ளிழவுபேறு களுககுடலாம்படியை யருளிசசெய்கிறுர்.

**மூலம்·—242 ப்ரஹ்மாவா யிழந்துபோதல் இடைச்சி யாய்ப் பெற்றுவிடுதல் செய்யும்படியா யிருக்கும்.**

வயா:—(ப்ரஹமாவாய்) என்று துடஙகி. அதாவது - தருஷ் டோத்காஷாதிஶயததுககுத் தக்க வஹங்காராதிகனை பரஹமா வாய், 540 "த்விபராரததாவஸாநே மாம் ப்ராப்து மாஹவஸி பத்மஜ" என்றும் 541 "கடிக்கமலததுள் ளிருநதும் காண்கிலான் கண்ண னடிக கமலநதன்னை யயன்" என்றும சொல்லுகிறபடியே இழநது போதல, அஹஙகார ஹேதுககளொன்று மில்லாமையாலே தத ராஹிதையாய் இடகைை வலகைை யறியாத விடைசசியான சிநதயநதி யாய், 316 "முக்திம் கதாநயா கோப கநயகா" என்னும்படி அவன திருவடிகளைப் பெற்று விடுதல்செயயும்படியா யிருக்கும் இவ்வஹங் கார தத் ராஹித்யங்களின் ஸ்வபாவமென்கை. இப்படி அஹங்கார தத் ராஹிதயங்கள் அவனை யிழக்கைககும் பெறுகைக்கு முட

லாகையாலே, ஸ்ரீகுலஶேகரபெருமாள் முதலானவர்கள் அஹங்கார ஹேதுவான ஜந்மங்களை யநாதரித்து தத்ரஹித ஜந்மங்களை யாதரித்தார்களென்று கருத்து.

243. அவ—(தன்னைத் தானே முடிக்கையாவது) [180] என்று துடங்கி இவ்வளவாக, அஹங்காராதிகளின் தோஷ முபபாதிக்கப்பட்டது; அநந்தரம் ப்ராப்யப்ராபகங்களிரண்டு மவனேயென்றிருக்கும் ப்ரபந்நாதிகாரியுடைய திநசர்யா விஶேஷம் சொல்லப்படுகிறது.

மூலம்—243 இப்படி ஸர்வ ப்ரகாரத்தாலும் நாஶ ஹேதுவான வஹங்காரத்துக்கும் அதினுடைய கார்யமான விஷயப்ராவண்யத்துக்கும் விளைநிலம் தானாகையாலே, தன்னைக் கண்டால் ஶத்ருவைக் கண்டாப்போலேயும்; அவற்றுக்கு வர்த்தகரான ஸம்ஸாரிகளைக் கண்டால் ஸர்ப்பத்தைக் கண்டாப்போலேயும்; அவற்றுக்கு நிவர்த்தகரான ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் பந்துக்களைக் கண்டாப்போலேயும்; ஈஶ்வரனைக்கண்டால் பிதாவைக் கண்டாப்போலேயும்; ஆசார்யனைக் கண்டால் பசியன் சோற்றைக் கண்டாப்போலேயும்; ஶிஷ்யனைக் கண்டால் அபிமதவிஷயத்தைக் கண்டாப்போலேயும் நினைத்து; *அஹங்காரார்த்த காமங்கள் மூன்றும், அநுகூலர்பக்கல் அநாதரத்தையும் ப்ரதிகூலர்பக்கல் ப்ராவண்யத்தையும் உபேக்ஷிக்குமவர்கள்பக்கல் அபேக்ஷையையும் பிறப்பிக்கும் என்றஞ்சி; ஆத்மகுணங்கள் நம்மாலும் பிறராலும் பிறப்

* "அர்த்தகாமாபிமாநங்கள் மூன்றும்" என்றும் பாடாந்தரம், வ்யாக்யாநத்தில் ஸுஸ்பஷ்டம்.

பித்துக்கொள்ள வொண்ணுது, ஸதா சார்ய ப்ரஸாதமடியாக வருகிற பகவத் ப்ரஸாதத்தாலே பிறக்குமத்தனையென்று துணிந்து ; தேஹயாத்ரையி லுபேக்ஷை யும், ஆத்மயாத்ரையி லபேக்ஷையும், ப்ராக்ருத வஸ்துக்களில் போக்யதாபுத்தி நிவ்ருத்தியும், தேஹதாரணம் பரமாத்ம ஸமாராதந ஸமாப்தி ப்ரஸாத ப்ரதி பத்தி யென்கிற புத்தி விஶேஷமும், தனக் கொரு க்லேஶ முண்டானுல் கர்மபல மென்றுதல் க்ருபா பலமென்றுதல் பிறக் கும் ப்ரீதியும், ஸ்வாநுஷ்டாநத்தில் ஸாதநத்வ புத்தி நிவ்ருத்தியும், வில க்ஷணருடைய ஜ்ஞாநாநுஷ்டாநங்களில் வாஞ்சையும், உகந்தருளின நிலங்களி லாதராதிஶயமும், மங்களாஶாஸநமும், இதரவிஷயங்களி லருசியும், ஆர்த்தியும், அநுவர்த்தந நியதியும், ஆஹார நியதி யும், அநுகூல ஸஹவாஸமும், ப்ரதி கூல ஸஹவாஸ நிவ்ருத்தியும், ஸதா சார்ய ப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

வ்யா.—(இப்படி ஸாவப்ரகாரத்தாலும) என்று துடங்கி, (ஸதாசாாய பரஸாதத்தாலே வாததிககுமபடி பண்ணிக்கொண்டு போரககடவன்) எனனுமளவாக. (இபபடி) என்று - கீழுகதமான பரகாரத்தை பராமர்ஸிககிறது. (ஸர்வ பரகாரத்தாலும் நாஶ ஹேதுவாகையாவது) - ஸ்வரூபேண முடித்தும, பாகவத விரோ தத்தைவிளைதது முடிததும், பக்வலலாப விரோதியாயும, எலலாப படியாலும, 444 "அஸந்நேவ" எனகிறபடியே - அஸத்கல்பமாம்படி ஸ்வரூபததை யுருவழியபபண்ணுமதா யிருக்கை. அஹங்காரந

தான், தேஹாத்மாபிமாந ரூபமாயும், தேஹாதிரிக்தாத்மவிஷயத்தில் ஸ்வாதந்த்ர்யாபிமாந ரூபமாயும், இரண்டு வகைப்பட்டிறே யிருப்பது ; இவ்விடத்தில், அவை யிரண்டும் சேரச்சொல்லப்படுகிறது. (அதினுடைய கார்யமான விஷயப்ராவண்யத்துக்கும்) தேஹாத்மாபிமாநமும் ஸ்வாதந்த்ர்யாபிமாநமுமே விஷயங்களை ஸ்வபோக்யத்வேந விரும்புகைக்கு மூலமாகையாலே, விஷயப்ராவண்யத்தை அஹங்கார கார்யமென்கிறது. விஷய ஶப்தத்தாலே - கீழ் அநுகூலமாகவும் ப்ரதிகூலமாகவும் சொல்லப்பட்ட விஹித நிஷித்தரூபவிஷய த்வயத்தையுஞ் சொல்லுகிறது. (விளைநிலம் தானுகையாலே) என்றது - இவை யிரண்டுக்கும் ஜந்மபூமி பகவத்ஸ்வரூப திரோதாநாதிகளைப் பண்ணக்கடவ குணத்ரயாத்மக ப்ரக்ருதி பரிணாமரூபமாய் ஸ்வகர்மவிஶேஷாரப்தமா யிருக்கிற ஶரீரவிஶிஷ்டனான தானுகையாலே யென்றபடி. கர்மாநுகுணமாக ரஜஸ்தமஸ்ஸுக்களாலே கலங்கவடிக்கும் ஶரீரவிஶிஷ்டனையாலே மதிமயங்கித் தானல்லாத தேஹத்தைத் தானுகவும் தனக்குரியனல்லாத தன்னை ஸ்வதந்த்ரனுகவு மபிமாநிப்பதும் தனக் கநர்த்தகரமான விஷயங்களிலே யத்யாதரத்தைப் பண்ணுவதா மவன்தானேயிறே. (தன்னைக்கண்டால்) இத்யாதி. இப்படி அநாதிகாலம் போநதவனுய் இப்போது மதுக்கு யோக்யமான ஶரீரவிஶிஷ்டனு யிருக்கிற தன்னை தர்ஶித்தால், "கொன்றல்லது விடேன்" என்று ஸாயுதனுய்ப் * பற்கவ்வித்திரியும் ஶத்ருவைக் கண்டாப்போலே குடல்கரித்து தனக்கு நாஶகனுக நினைத்தும் ; தங்களுடைய வுக்தி வ்ருத்திகளாலே துர்வாஸனையைக் கிளப்பி அஹங்காராதிகளை மேன்மேல் வளரும்படி பண்ணும் ததுபயவஶ்யரான ஸம்ஸாரிகளைக் கண்ணெதிரே கண்டால், அணுகில் மேல்விழுந்தள்ளிக்கொள்ளும் அதிக்ரூரமான ஸர்ப்பத்தைக் கண்டாப்போலே யஞ்சி நடுங்கிப் பிற்காலித்து நமக்கு பாதகரென்றே நினைத்தும் ; தங்களுடைய உபதேஶாநுஷ்டாநங்க ளிரண்டாலும் அஹங்காராதிகளின் தோஷ தர்ஶநத்தைப் பண்ணுவித்து தத்ப்ரஸங்கத்திலே பீதபீதனும்படிபண்ணி ஸவாஸநமாக வவற்றை நிவர்த்திப்பிக்கும் மத்யமபத நிஷ்டரான ஸ்ரீவைஷ்ணவர்களைக் காணப்பெற்றால், தன்னுடைய வநர்த் † தாப்யுதயங்க ளிரண்டும் தங்களதாய்

* பற்கவ்வுகை - கோபத்தாலே யுதட்டைக்கடிக்கை.

† அப்யுதயங்கள் - இஷ்ட ப்ராப்திகள், வ்ருத்தி.

தியதுவிலக்கி நல்லதில்மூட்டி ரக்ஷிக்கும ஆபதபந்துக்களாக கண் டாப்போலே யதயாதரம பணணி நமக்கு நற்றுணையானவாக ளென்று நினைததும, அடியிலே கரணகளேபரங்களைத தநதும அவ ற்றைக்கொண்டு வயபிசரியாமல நல்வழி நடக்கும்படி ஶாஸ்தரங்க ளைக காட்டி அகருத்யகரணாதிகளில ஶிக்ஷிதது ஸாவாவஸ்தையிலும் தன்னுடைய ஹிதமே பாாததுப்போரு மீஶ்வரனை அர்ச்சாஸ்தலங களிலே கண்களாரக கண்டால, உதபாதகனும் விதயாபரதனும் அபதேபரவ்ருததனுகாதபடி நியமிதது நடததிக்கொண்டுபோரும் ஹிதைஷியான பிதாவைக் கணடாப்போலே ஸ்நேஹ * ஸாதவஸ விநயங்களை யுடையனாயக்கொண்டு நமக்கு ஹிதபரனென்று நினைத் தும்; அநாதிகாலம 444 "அஸந்நேவ" என்னும்படிகிடந்த தன்னை பகவதஸமபநததை யறிவிதது ஸததாவானுக்கி மேன்மேலும தன் னுபதேஶததாலே ஜ்ஞாந வைராகய பக்திகளை விளைதது கையிற கனியென்ன பகவத்விஷயததைக காட்டித்தரும மஹோபகாரகனும் 542 "உன்சீரே யுயிர்க்குயிராய" என்றும், 543 "உன்றன் மெய்யிற் பிறங்கிய சீரன்றி வேண்டிலன" என்றும சொல்லுகிறபடியே குண விக்ரஹங்களாலே தனக்கு தாரகபோகயனுமிருக்கு மாசாரியனைக கண்ணுக்கிலக்காம்படி கண்டால, கண்ணுஞ்சுழலை யிடும் பெரும் பசியன் தாரகமுமாய போகயமுமான சோற்றைக கணடாப்போலே அத்யபிநிவேஶத்தோடே யநுபவிதது நமக்கு தாரக போகய விஷய மென்றே நினைத்தும, ஸாதயாநதா நிவ்ருத்யாதி ஸமஸ்த ஸ்வ பாவஸம்பநநதயா ஸம்யக்ஜ்ஞாந பரேமவானு யிருக்கும் ஸச்சிஷ்ய னைக கண்டால, தனக காநநதாவஹமான அபிமதவிஷயத்தைக் கண்டாப்போலே பகவத குணாநுஸநதாந தசையில நாம சொல்லு கிற பகவத் குணங்களை யாதரித்துக்கேட்பது அநுபாஷிபபது வித்த னுவதா மாகாரங்களினாலே நமக காநநதாவஹனென்று நினைத்தும்; (அஹங்காரார்த்தகாமங்கள் மூன்றும) இதயாதி. இவை மூன்றி லுமவைததுக்கொண்டு, அஹங்காரம் அநுகூலாபககல அநாதரத் தைப பிறப்பிக்கும்; அதாவது - ஶேஷத்வததை தன்ஸந்நிதியில ஜீவிக்கவொட்டாதபடியிறே அஹங்காரத்தின் பலமிருப்பது; அஹங்காரியானவன் 544 "நநமேயம" என்றிருக்குமதொழிய ஒரு விஷயத்திலும தலைதாழ்க்க விசையானே; ஆகையாலே அஹங் காரம மேலிடுமாகில், ஸ்வரூபவர்த்தகராய்க்கொண்டு அநுகூலரா

* ஸாதவஸம் - பயம்.

யிருக்கும ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால "நம்முடைய ஶேஷிகள்" என்று துடைநடுங்கி யெழுந்திருந்து பரஹுமாதிபூர்வகமாக வந்து வார்த்தைகளைப் பண்ணவொட்டாதே, தன்னை அவர்களி லதிகனாக வாதல அவர்களைத் தன்னோடு ஸமராகவாதல புத்திபண்ணி யநா தரித்திருக்கும்படிபண்ணு மென்கை. அர்த்தம் ப்ரதிகூலர்பக்கல பராவண்யத்தைப் பிறப்பிக்கும; அதாவது - ஆரையாகிலுமசென் றநுவர்த்தித்து ஒருகாசு பெறறதாயவிடவேணு மென்னும்படியிறே அர்த்தபராக மிருக்கும்படி; ஆகையால, அது ஸ்வரூபநாஶகதவேந ப்ரதிகூலரான ஸம்ஸாரிகளைக் கண்டால வெருவி யோடிப்போக வேண்டி யிருக்க, ஒருகாசை நச்சி அவர்களோடே யுறவு பண்ணி அவர்களிருந்த விடங்களிலே பலகாலும் செல்லுவது, அவர்களை யழைத்து விருந்திடுவது, அவர்கள் குணகீர்த்தநம பண்ணுவதாம் படி, அவர்கள் விஷயத்திலே பராவண்யத்தை யுண்டாக்குமென்கை. காமம் - உபேக்ஷிக்குமவர்கள்பக்க லபேக்ஷையைப் பிறப்பிக்கும; 545 "காம்யத இதி காமஃ" என்கிறபடியே - காம ஶப்தத்தாலே விஷய ஸம்போக ஸங்கத்தைச் சொல்லுகிறது, அது, 546 "ரகிபோமின்" இத்யாதிப்படியே - தாரித்ர்ய வார்த்தகாதிகளடியாக தன்னை முகம் பாராமல் தள்ளிக் கதவடைத்து உபேக்ஷாவாதம் பண்ணும ஸ்த்ரீ கள் பக்கலிலே, 547 "ஏழையார்தா மிழிப்பச செல்வர்" என்கிறபடியே- அவர்க ளுபேக்ஷாவாதம முதலானவைதன்னையே யுத்தேஶ்யமாகக் கொண்டு செல்லுமபடி, விலக்ஷணர் கேட்டால சிரிக்கும்படியான ஹேயாபேக்ஷையை விளைக்கு மென்கை.

ஆக, இப்படி அஹங்காராதிகள் மூன்றும் ஸ்வரூபவர்த்தகரை யநாதரிக்கும்படியும், ஸ்வரூபநாஶகரை யாதரிக்கும்படியும், ஸ்வரூப நாஶகரையோடே யுபேக்ஷகருமா யிருக்குமவர்களை யபேக்ஷிக்கும படியும பண்ணுமென்று அவற்றின் கொடுமைகளை யநுஸந்தித்து என்செய்யத் தேடுகிறதோ வென றஞ்சி; (அர்த்தகாமாபிமாநங்கள் மூன்றும்) என்று பாடமாகிலும், 548 "காவோபிமாநோஹங் காரஃ" என்கிறபடியே - அபிமாந ஶப்தத்தாலே அஹங்காரத்தைச் சொல்லுகிறதாகையாலே, (அநுகூலர் பக்கல) இத்யாதியை * நிரை நிரையாக்காதே யதாயோகங்கொண்டு கீழ்சசொன்ன ப்ரகாரத் திலே யோஜிக்கக்கடவது. (ஆத்ம குணங்கள்) இத்யாதி. ஶமதமாத யாத்மகுணங்கள், அநாதிகால மஹங்காராதிகளுக்கு விளைநிலமாய்

* நிரைநிரை - க்ரமத்திலே பூரிக்கை.

அநாத்மகுணங்களைக் கூடபூரித்துக்கொண்டு காம பரதந்த்ரராயிருக்கிற நம்முடைய யத்நத்தாலும், ஆத்மகுணோதய விரோதிகளான அஹங்காராதிகளுக்கு வாதகராய் அநாத்மகுண பரிபூர்ணராய் காமவஶ்யரா யிருக்கிற பிறருடைய யத்நத்தாலும் பிறப்பித்துக் கொள்ள வொண்ணாது, ஆத்ம குணங்களுக்கெல்லாம் கொள்கல மாய அடியிலே தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே நம்மை யங்கீகரித்தருளி நமக்காத்மகுணங்க ளுண்டாவ தெப்போதோ வென்று பலகாலும் கரைவது பகவானை யாதிப்பதாய்க்கொண்டு போரும் ஸதாசார்யனுடைய ப்ரஸாதமடியாக வருகிற, நம்முடைய வாத்மகுணோதய விரோதி பாபக்ஷயம பிறக்கும்படி அமலங்களாக விழிக்கும் பகவானுடைய பரிபூர்ண ப்ரஸாதத்தாலே பிறக்குமத் தனையென் றதயவஸிதது. (தேஹயாத்ரையி லுபேக்ஷையாவது) - தேஹ ரக்ஷணார்த்தமான வ்யாபாரத்தில விருப்பமற்றிருக்கை. (ஆத்மயாத்ரையி லபேக்ஷையாவது) - ஶேஷத்வமே வடிவான வாத்மாவுக்கு தாரகாதிகளான குணாநுபவ கைங்கர்ய ப்ரவ்ருத்தியில பெறறவளவால த்ருப்தனாயிராதே மேன்மேலு மாசைப்படுகை. (ப்ராக்ருத வஸ்துக்களில போக்யதா புத்தி நிவ்ருத்தியாவது) - * அஶநாச்சாதநாதிகளுக்க குறிப்பான ப்ராக்ருதபதார்த்தங்களில ஆதரத்துக் கடியான போக்யத்வபுத்தி தவிருகை.

(தேஹதாரணம்) இத்யாதி. அதாவது - அந்த ப்ராக்ருத வஸ்துக்களில தேஹம தரிக்கைக்குத் தக்கவளவு புஜிக்கை, பரமாத்மாவான ஸர்வேஶ்வரனுடைய ஸமாராதநத்தின ஸமாபதி ரூபையான ப்ரஸாத ப்ரதிபத்தியென்கிற புத்தி விஶேஷமு மெனகை. அன்றிக்கே, (பரமாத்ம ஸமாராதந ஸமாபதி) என்கிற புத்தி விஶேஷமும, தத்ப்ரஸாத ப்ரதிபத்தி யென்கிற புத்தி விஶேஷமும் என்னவுமாம். (தனக்கு) இத்யாதி. அதாவது - முமுக்ஷுவாய ப்ரபந்நனானாலும் ப்ராரப்த ஶரீர மிருக்குமளவும் தாபத்ரயம் வருகை தவிராதிறே; ஆகையாலே. இஶ்ஶரீரத்தோடே யிருக்கிற தனக்கு தாபத்ரயங்களி லேதேனுமொரு க்லேஶமுண்டானால், "இது அநுபவ விநாஶ்யமான ப்ராரப்தகர்மபலமன்றோ, ஏவம் பூதகர்மங்க ளுள்ளவை கழியுமளவன்றோ விஶ்ஶரீரத்தோடே நம்மை யெம்பெருமான் வைக்கிறது, ப்ராப்தி ப்ரதிபந்தகங்களிலே யொன்றாகிலுங் கழியப்பெறறோமே" என்கிற வநுஸந்தாநத்தாலே

* அசனம் - போஜனம். ஆச்சாதனம் - வஸ்த்ரம்.

யாதல், "துர்வாஸனையாலே யிவ்வுடம்பைவிட விசையாமல் ப்ராக்ருத பதார்த்தங்களையும் ஜீவித்துக்கொண்டு ஸம்ஸாரத்துக்குள்ளே பொருந்தியிருக்கிற நம்மை துக்க தர்ஶநத்தைப் பண்ணுவித்து இதில் பற்றறுத்துக்கொண்டுபோக நினைக்கிற ஸர்வேஶ்வரனுடைய க்ருபையின் பலமன்றோ விது" என்கிற அநுஸந்தாநத்தாலேயாத லுண்டாகக்கடவ ப்ரீதியு மென்கை. பூர்வாகம் உத்தராகம் ப்ராரப்தகண்டமெல்லாம் கழிக்கிறவனுக்கு, வர்த்தமாந ஶரீரத்தி லநுபாவ்ய கர்ம மித்தனையும் கழிக்கை யரிதன்றிறே; கர்மபலமான துக்க பரம்பரைகளை யநுபவியாநின்றாலும் "இத்தேஹத்தைவிட" என்றால் இசையாத விவனை நிர்துக்கனுக்கி வைப்போமாகில், இஶ்ஶரீரத்தோடே நெடுங்காலமிருக்க விச்சித்தல் இன்னமொரு ஶரீரந்தன்னை யிச்சிக்குதல்செய்யு மாகையால் இஶ்ஶரீரத்துக்குள்ள கர்ம மநுபவித்தே யிருக்கக்கடவ னென்றிறே வைக்கிறது; ஆனபின்பு, மற்றுண்டான கர்மங்களெல்லாம் கழித்தது ஸம்ஸாரத்தில்நின்று மிவனைக் கடுகத் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளுகையி லுண்டான க்ருபையாலேயானுப்போலே, இத்தனையும் கழியாமல் வைத்ததும் க்ருபையாலேயிறே. அநாதிகாலம் பரிக்ரஹித்த ஶரீரந்தோறு மநுபவித்த துக்கம் பகவந் நிக்ரஹபலம், இது அவனநுக்ரஹபலம்; 549 "யஸ்யாநுக்ரஹ மிச்சாமி தஸ்யவித்தம் ஹராம்யஹம்" என்றானிறே; ஆகையா லித்தை (க்ருபா பலம்) என்கிறது.

(ஸ்வாநுஷ்டாநத்தில் ஸாதநத்வ புத்தி நிவ்ருத்தியாவது) - ப்ரபந்நனை தன்னுடைய வதிகாராநுகுணமாக வநுஷ்டித்துக்கொண்டு போரும் நல்லொழுக்கங்களை பேற்றுக்கு ஸாதநமாக நினையாதொழிகை. (விலக்ஷணருடைய ஜ்ஞாநாநுஷ்டாநங்களில் வாஞ்சையாவது) நாட்டாரோ டியல்வொழிந்து நாரணனை நண்ணி யிருக்கையாலே நிர்மல ஜ்ஞாந பக்திகரா யிருக்கும் விலக்ஷணரான பூர்வர்களுடைய விலக்ஷணமான வந்த ஜ்ஞாநமும் அநுஷ்டாநமும் நமக்குமுண்டாகவேணுமென்னு மாசை. (உகந்தருளின நிலங்களி லாதராதிஶயமாவது) 550 "தானுகந்த வூர்" என்கிறபடியே - ஸர்வேஶ்வரனுகந்து வர்த்திக்கிற திவ்யதேஶங்களென்றால்,550-1 "கண்டியூ ரரங்கம் மெய்யங் கச்சி பேர் மல்லையென்று மண்டினார்" என்கிறபடியே - மநஸ்ஸு அங்கே மண்டி விழும்படி மேன்மேலும் பெருகுகிற வாதரம். (மங்களாஶாஸநமாவது) - அவ்வோ திவ்யதேஶங்களை விரும்பி வர்த்திக்கிற வவனுடைய ஸௌகுமார்யத்தையும், வாசியறிந்து

நோக்கும் பரிவரில்லாமையையும், ப்ரதிகூல வர்க்கங்களி னதிஶயத்தையும நினைதது ஏங்கி, "என்செய்யத் தேடுகிறது!" என்று வயி றெரிந்து இரவும்பகலும் திருப்பல்லாண்டு பாடுகை. (இதர விஷயங்களி லருசியாவது) - பகவத வ்யதிரிக்தங்களான ஹேய விஷயங்களில தோஷதர்ஶநாதிகளாலே விருப்பமற்றிருக்கை. (ஆர்த்தி யாவது) - இதரவிஷய ப்ராவண்ய ஹேதுவான விவ்வுடம்போடே இருள்தரு மாஞாலததிலிருக்கிறவிதி லடிககொதிப்பாலும், ப்ராப்ய வைலக்ஷண்ய தாஶநததாலவந்த ப்ராப்தி விளம்பாஸஹத்வத் தாலும படும் க்லேஶம். (அநுவர்த்தந நியதியாவது) - பகவத் பாகவத விஷயங்களில ஸ்வஶேஷத்வாநுகுணமாக நீசோக்தி நீச வ்ருத்திகளாலே பண்ணு மநுவாத்தநத்தை ப்ராக்ருத விஷயங்களில மறந்தும் செய்யாதொழிகை. (ஆஹார நியதியாவது) - ஜாத்யாஶ்ரய நிமித்தாதுஷ்டங்களாய், ஸர்வேஶ்வரனுடையவும் ததீயருடையவும் ப்ரஸாதங்களான வஸ்துக்களையே ஆஹாரமாகக கொள்ளும தொழிய, ததிதரங்களானவை கொள்ளக்கடவோமல்லோ மென் றிருக்கை.

(அநுகூல ஸஹவாஸமாவது)-ஸ்வஸமஸர்க்கததாலே ஜ்ஞாநா நுஷ்டாநங்களை வர்த்திப்பியாநிற்கு மநுகூலரானவர்களுடனே க்ஷணகாலமும பிரியாதே கூடிவாத்திக்கை. (ப்ரதிகூல ஸஹவாஸ நிவ்ருத்தியாவது) - ஸ்வஸமஸாக்கததாலே ஜ்ஞாநாநுஷ்டாநங்களை நஶிப்பியாநிறகும் ப்ரதிகூலரானவாகளுடன் க்ஷணகாலமும கூடி வர்த்தியாதொழிகை. இங்குச்சொன்ன வநுகூலரும ப்ரதிகூலரு மின்னாரென்னுமிடம் மேலே தாமே யருளிச்செய்யக்கடவரிறே. (ஸதாசார்ய ப்ரஸாதததாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன்) அதாவது - கீழ்ச்சொன்ன விவையித்தனையும, ஜ்ஞாநாநுஷ்டாந பரிபூர்ணனான ஸதாசார்யனுடைய ஸர்வமங்களாவஹமான ப்ரஸாதத்தாலே தன்னடையே மேன்மேலு மபிவ்ருத்தி யாம்படி செய்துகொண்டு போரக்கடவ னென்றபடி. ஸதாசார்ய ப்ரஸாதததாலே வர்த்திக்கும்படி யிவன் பண்ணிக்கொண்டு போருகையாவது - தத்ப்ரஸாதங்களைச் செய்துகொண்டு போருகை. தத்ப்ரஸாதங்களாவன-இதினுடைய வுபபாதக ஸ்தலத்தி லருளிச் செய்கிறவை. (போகக்கடவன) என்று விதிரூபேண வருளிச்செய்தது - இதினுடைய வவஶ்யாநுஷ்டேயத்வம் தோற்றுகைக்காக.

பெரியஜீயர் திருவடிகளே ஶரணம்.

ப்ராபகாந்தர பரித்யாக ப்ரகரணமான

த்விதீயப்ரகரணம் ஸம்பூர்ணம்.

---

## த்ருதீய ப்ரகரணம்

### மங்களாஶாஸந ப்ரகரணம்

*மங்களாஶாஸநத்தின் ஸ்வரூபௌசித்ய விசாரம்.*

244. *அவ'—இந்த* *திரசாரயையிற் சொன்னவற்றில விவரிக்க வேண்டுமவற்றை விவரிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமத்தில் மங்களாஶாஸநத்தை விவரித்தருளுகிறார்.*

**மூ:—244 மங்களாஶாஸநம் ஸ்வரூப விருத்தமன்றோ வென்னில்; ஜ்ஞாந தஶையில் ரக்ஷ்யரக்ஷக பாவம் தன்கப்பிலே கிடக்கும்; ப்ரேமதஶை யில் 'தட்டுமாறிக் கிடக்கும்.**

*வயா:—(மஙகளாஶாஸநம) என்று துடங்கி. ஹேயப்ரத்யநீக னாய் கல்யாணைகதாநனாய் ஸ்வேதர ஸகல ரக்ஷகனாயிறே ஸர்வேஶ வரனிருப்பது; இப்படி யிருக்கிற வவனைக்கொண்டு தனக்குண் டான வமங்களங்களைப போக்கி இல்லாத மஙகளங்களை யுண்டாக கிக்கொள்ளக்கடவ தத ரக்ஷ்யபூதனான விவன், தனக்கு ரக்ஷகனான வவனுக்குத் தான் மஙகளஙகளை யாஶாஸிக்கை தத்தேக ரக்ஷ்யத்வ ரூபமான ஸ்வரூபத்துக்கு விருத்தமன்றோ வென்கிற ஶங்கையை யநுவதிக்கிறார். (மங்களாஶாஸநம் ஸ்வரூபவிருத்தமன்றோ வென் னில்) என்று. அத்தைப பரிஹரிக்கிறார், (ஜ்ஞாந தஶையில்) என்று துடங்கி. (ஜ்ஞாந தஶையாவது) - ஸர்வேஶ்வரனே ரக்ஷகனாகவும் தானவனுக்கு ரக்ஷ்யபூதனாகவும பரணவததிற் சொல்லுகிறபடியே தெளியக்கண் டநுஸந்திக்கும் தஶை; அந்த தஶையில, 551 "களை வாய் துன்பம களையாதொழிவாய்" இத்யாதிப்படியே - தன்னுடைய வநிஷ்ட நிவ்ருத்யாதிகளுக்கு அவனே கடவனென் றிருக்கையாலே, ரக்ஷ்யரக்ஷக பாவம் தனக்கடைத்த ஆஶ்ரயத்திலே கிடக்கும். (ப்ரேம தஶையாவது) - ஸர்வேஶ்வரனுடைய ஸௌந்தர்ய ஸௌகு மார்யங்களை யநுஸந்தித்து "இவ்விஷயத்துக் கென்வருகிறதோ" என்று அஸ்தாநே பயஶங்கை பண்ணி அவன் ஸ்வரூபத்தை யநு ஸந்திக்க க்ஷமனன்றிக்கே நெஞ்சு மறுகும்படியான தஶை; அந்த தஶையில் ஈஶ்வரனை ரக்ஷிக்க வழிதேடித் தடுமாறுகையாலே, ஈஶ வரன்பக்கலிலே ரக்ஷ்ய பாவமும் சேதநன்பக்கலிலே ரக்ஷக பாவமு*

மாய்த் தனக்கடைத்த வாஸ்ரயத்தி லன்றிக்கே மாறுடிக்கிடக்கு மென்றபடி.

245. அவ:—உக்தார்த்தத்தை விஸதீகரிக்கிறார்.

மூ:—245 அவன்ஸ்வரூபத்தை யநுஸந்தித்தால், அவனைக் கடகாகக்கொண்டு தன்னைநோக்கும்; ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்தால், தன்னைக் கடகாகக்கொண்டு அவனை நோக்கும்.

வ்யா:—(அவன் ஸ்வரூபத்தை) என்று தொடங்கி. அதாவது - பரத்மாக்ஷரத்தில் சொல்லுகிறபடியே ஸர்வஜ்ஞனும் ஸர்வஸக்தியாய ஸர்வரக்ஷகனுன வவனுடைய ஸ்வரூபத்தை யநுஸந்தித்தால், அவனைத் தனக் கநிஷ்டநிவாரகனாகக்கொண்டு, அஜ்ஞனும் அஸக்தனும் அபராபதனுன தன்னை ரக்ஷித்துக்கொள்ளும்; * பேசப் பிசகும்படியான வவனுடைய ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்தால், அவனுடைய ஸர்வஸக்தித்வாதிகளை மறந்து † குழைச்சரக்காக நினைத்துத் தன்னை ரக்ஷகனாக்கொண்டு மங்களாஸாஸநம் பண்ணி யவனை ரக்ஷிக்குமென்கை. இவ்விடத்தில ஸௌந்தர்யம் சொல்லிற்றிலலையேயாகிலும், அதுவும மங்களாஸாஸந ஹேதுவாகையாலும மேலே சொல்லுகையாலும், ஸௌகுமார்ய மிதுக்கு முபலக்ஷணம்.

246. அவ:—இப்படி ஸௌகுமார்யாதிகளைக்கண்டு கலங்கி ரக்ஷகனுன வவனுடைய ஸக்தியைபவத்தை மறந்து தானவனை ரக்ஷிக்குமென்கிற விவர்த்த மெங்கே காணலாமென்னு மபேக்ஷயிலே, இது ஸிஷ்டாசார ஸித்தமென்னுமிடங் காட்டுகிறார் மேல.

மூ:—246 இவ்வர்த்தம், சக்ரவர்த்தி, ஸ்ரீஜநகராஜன் திருமகள், விஸ்வாமித்ரன், ஸ்ரீதண்டகாரண்ய வாஸிகளான ருஷிகள், திருவடி, மஹாராஜர், ஸ்ரீநந்தகோபர், ஸ்ரீவிதுரர், பிள்ளையுறங்கா வில்லிதாஸர், தொடக்கமானவர்கள் பக்கலிலே காணலாம்.

---

* பேசப் பிசகுகை - வார்த்தை சொல்லில ஸௌகுமார்யத்தாலே அந்யதாவாகை. † குழைச்சரக்கு-கெட்டுப்போகிற சரக்கு. மநஸ்ஸை யிளக்கப்பண்ணும் சரக்கு. ரக்ஷ்யவஸ்து வென்றபடி.

வ்யா:—(இவ்வர்த்தம) என்று தொடங்கி. சக்ரவர்த்தி, பெருமாள் பிராட்டியைத் திருமணம் புணர்ந்து மீண்டெழுந்தருளாநிற்க, பரசுராமன் வந்து தோற்றினவளவிலே, தாடகாதாடகேய நிரஸநங்களாலே யிவருடைய மங்கிவைபவத்தை வயகதமாக வறிந்திருக்கச்செய்தேயும, இவருடைய பால்யத்தையும ஸௌகுமார்யத்தையுமே பார்த்து, "என்னாகப்புகுகிறதோ!" என்று பீதனாய், தான் முன்னே யோடிச்சென்று, 552 "க்ஷத்ரரோஷாத் ப்ரஸாந்தஸ் த்வம் ப்ராஹ்மணஸ்ச மஹாயஸா: - பாலாநாம் மமபுத்ராணாம் மபயம் தாது மாஹஸி" என்று ஸரணம் புக்கு, பின்னையுமவன் பெருமாள் மேலே யடர்ந்துசெல்லுகிறபடியைக்கண்டு நிஷ்ப்ராணனாய் நின்று, 553 "கதோராம இதி ஸ்ருத்வா ஹ்ருஷ்ட: ப்ரமுதிதோ ந்ருப: - புநர் ஜாதம் ததாமேநே ஸுதா நாத்மா நமேவச" என்கிறபடியே - அவன் தோற்று மீண்டுபோனானென்று கேட்டபின்பு, தானும பிள்ளைகளும மறுபிறவி பிறந்ததாக நினைத்திருந்தானிறே.

ஸ்ரீஜநகராஜன் திருமகள், தலைநீரபபாட்டிலே யிவருடைய வைபவமெல்லா மறியுமவளா யிருக்கச்செய்தேயும், திருவபிஷேகம் பண்ணுகைக்காக வலங்கருத திவய காத்ரராய்க்கொண்டு சக்ரவாத்தித திருமாளிகைக கெழுந்தருளுகிறபோது, இவர முகிலே தோறறு "இதுக கென்வருகிறதோ!" என்று ப்ரேமத்தாலே கலங்கி, 554 "பதிஸம்மாநிதா ஸீதா பர்த்தார மஸிதேக்ஷணா-ஆதவார மநுவவ்ராஜ மங்களாந யபிதத்நுஷீ" என்று - திருவாசலளவும் தான் மங்களாஸாஸநம பண்ணிக்கொண்டு பின்சென்று, 555 "பூர்வாம் திஸம் வஜ்ரதரோ தக்ஷிணாம பாதுதே யம: - வருண: பஸ்சிமாமாஸாம் தநேஸஸ்தூ த்தராம் திஸம" என்று - திக்பாலர்களை யிவர்க்கு ரக்ஷகராக வபேக்ஷித்தாளிறே. (ஸ்ரீஜநகராஜன்) என்றும் (திருமகள்) என்றும் பிரித்துச சொல்லவுமாம. அப்போதைக்கு ஸ்ரீஜநகராஜன், மஹேஸ்வர தநுர்பங்கத்தாலே பெருமாளுடைய ஸக்திவைபவத்தைக கண்டிருக்கச்செய்தேயும், 556 "இயம்ஸீதா மமஸுதா ஸஹதர்மசரீ தவ-ப்ரதீச்சசைநாம் பத்ரந்தே பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா" என்று - "ஆபிஜாத்யாதிகளால் வீறுடையளான இவளைக் கைக்கொண்டருளும்" என்று காட்டிக்கொடுக்கிறவளவிலே, இவருடைய வழகையும் ஸௌகுமார்யத்தையும் கண்டு கலங்கி, இச்சேர்த்திக் கொரு தீங்கு வாராதொழியவேணும் என்று "பத்ரந்தே" என்று மங்களாஸாஸநம் பண்ணினானென்கை.

விஸ்வாமித்ரன், தன்னுடைய * அத்வர த்ராணார்த்தமாகப் பெருமாளை யழைத்துக்கொண்டு போருகிறபோது, நடுவே தாடகை பெரிய † ஆர்ப்பரவத்தோடே ஆக்ரமித்துக்கொண்டு வருகிறபடியைக்கண்டு, 557 "அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்யபராக்ரமம்" என்கிறபடியே - பெருமாளுடைய ஶக்திவைபவத்தை யறிந்திருக்கச்செய்தேயும், ஸௌகுமார்யத்தைப் பார்த்துக் கலங்கி, 558 "விஶ்வாமித்ரஸ்து ப்ரஹ்மர்ஷிர் ஹுங்காரேணாபி பர்த்ஸ்யதாம் - ஸ்வஸ்தி ராகவயோரஸ்து ஜயஞ்சை வாப்யபாஷத" என்கிறபடியே-தான் முன்னேநின்று அவளை ஹுங்கரித்து, பெருமாளுக்கும் திருத்தம்பியாருக்கும் ஒருதீங்கு வாராமைக்காக மங்களாஶாஸநமும் செய்தானிறே.

ஸ்ரீ தண்டகாரண்யவாஸிகளான ருஷிகள், 559 "தே தம் ஸோமமிவோத்யந்தம் த்ருஷ்ட்வா வை தர்மசாரிண: - மங்களாநி ப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்ருஹ்ணந் த்ருட வ்ரதா:" என்று தங்களாபந்நிவ்ருத்தியையும் அபிமத ஸித்தியையும் பண்ணித்தருவா ரிவரேயென்று ஸாதநாநுஷ்டாநம்பண்ணுகிற தாங்கள், இவர ஸந்நிஹிதரானவாறே அவற்றை மறந்து, இவர் வடிவழகிலே துவக்குண்டு மங்களாஶாஸநம் பண்ணினார்களிறே.

திருவடி, ப்ரதம தர்ஶநத்திலே 560 "ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச பாஹவ: பரிகோபமா: - ஸர்வ பூஷண பூஷார்ஹா: கிமர்த்தம் நவிபூஷிதா:" என்று ‡ கணையங்கள்போலே யிருக்கிற திருத்தோள்களில மிடுக்கைக்கண்டு, "நமக்கிவர் ரக்ஷகராகக் குறையில்லை" என்று புத்திபண்ணுகிறகச்செய்தே, அவற்றி னழகைக்கண் டீடுபட்டு, "பிறர் கண்ணெச்சில படில் செய்வதென்" என றதிஶங்கை பண்ணி, "திருவாபரணங்களாலே யிதனை மறைத்திட்டு வையாதே யிப்படி வெளியிடக் காரணமென்!" என்று வயிறுபிடித்து, பின்பும், பெருமாளுடைய ஶக்திவிஶேஷத்தை ப்ரத்யக்ஷமாகக் காணுகிறகச்செய்தேயும், ஸௌகுமார்யாநுஸந்தாநத்தாலே "இவர்க்கென் வருகிறதோ" என்று துணுக்குத் துணுக்கென்று ஸர்வதஶையிலும் கூடநின்று நோக்கிக்கொண்டு திரிந்தானிறே.

மஹாராஜர், வாலிவதாதிகளாலே பெருமாளுடைய ஶக்தி கௌரவத்தைக் கண்டிருக்கச் செய்தேயும், ஸௌகுமார்யத்தையே

---

* அத்வர த்ராணார்த்தம் - யாக ரக்ஷணார்த்தம். † ஆர்ப்பரவம் - ஆரவாரம். ‡ கணையம் - ஆனைகட்டும் கம்பம்.

பார்த்துக் கலங்கி, ஸ்ரீவிபீஷணாழ்வான் நாலுபேரும் தானுமாய் வந்து தோற்றினபோது, 561 "ஏஷ ஸர்வாயுதோ பேதஸ சதுர்பிஸ் ஸஹ ராக்ஷஸை: - ராக்ஷஸோபயேதி பஸ்யதவம் அஸ்மாந ஹந்தும் நஸமஸய:" என்று - நமக்கெல்லாம ஒருயிரான பெருமாளை நலிகிற வழியாலே நம்மையெல்லாரையும் முடிப்பதாக வருகிறானிவன் என்றறுதியிட்டு, முதலிகளுக்குக காட்டி, 222 "ராகவம ஸரணம் கத:" 413 "நிவேதயத மாம க்ஷிபரம" என்ற உகதிகளைக் கேட்டுவைததும், 562 "வதயதாமேஷ தீவரேண தண்டேந ஸசிவைஸ் ஸஹ - ராவணஸ்ய நருஸமஸஸய பராதாஹயேஷ விபீஷண:" என்று - ராவண ஸம்பநதத்தையே பார்த்து இவனை சித்ரவதம் பண்ணவேணுமென்பது, 563 "ராவணோந பராணு ஹிதம் தமவைஹி நிஸாசரம - தஸயாஹம நிக்ரஹம மநயே க்ஷமம க்ஷமவதாமவர" என்று - ராவணன வரவிட வநதவனென்றே யவனைத திருவுள்ளம் பற்றவேணும, அவனை தண்டிக்கையே பராப்தமென்று புத்திபண்ணுநின்றேன் என்பதாய இப்புடைகளிலே பலவுறறையுஞ சொலலி, "இவனை ஸர்வதா கைக்கொள்ளவொண்ணாது" என்று ஒருநிலைநின்று, 564 "பிஸாசாந தாநவாந" இதயாதியாலே தம்முடைய பலததைக காட்டியும, கபோதோபாக்யாநம் கண்டுபாக்யாநம் இவை யருளிசசெயதும் தெளிவிதது பயததைக கெடுதது, 409 "ஆநயைநம் ஹரிஸரேஷட" என்னவேண்டும்படி பெருமாளைக குழைச்சரக்காக நினைததுக் காத்துககொண்டு போநதாரிறே.

(மஹாராஜர்) என்கிறது - ஸ்ரீ ஜடாயுமஹாராஜரை யென்றும் சொலலுவர்கள். அதாவது - ஸ்ரீஜடாயுமஹாராஜர், பிராட்டிககாக ராவணனோடே பொருது குற்றுயிராய்க்கிடக்கிறதமமைப பெருமாள்வநது கண்டவளவிலே, ஜநஸ்தாநததிலிருநத பதினாலாயிரம் ராக்ஷஸரையும * தனிவீரஞ்செய்துநின்று கொன்ற தோள்வலியை யறிநதிருக்கச்செய்தேயும, 565 "யாமோஷதிமிவாயுஷமந நவேஷஸி மஹாவநே - ஸாதேவீ மமச பராணா ராவணேநோபயம் ஹ்ருதம்" என்று - "அருமருநது தேடுவாரடவிதோறுந் தடுமாறுமாப்போலே யாவளொருத்தியை யிநதப் பரநதகாட்டிலே தேடிக்கொண்டு திரிகிறீர், உமக்கு நிதயபராணஸமயான் வளும் என்னுடைய பராணஙகளு மிரண்டும் ராவண

* தனிவீரம் - ஸஹாயமற்ற யுத்தம்.

ஞகிற * பையலாலே யபஹ்ருதமாய்த்துக்காணும்" என்று சொல்லா நிற்கச்செய்தே, இவருடைய விரஹக்லேஶத்தால வந்த தளர்த்தியை யும் ஸௌகுமார்யத்தையும் ராக்ஷஸரோட்டை வான் பகையையும் நினைத்து, "என்னுகத தேடுகிறதோ" என்றஞ்சி, "ஆயுஷ்மந்" என்று-ஆயுஸ்ஸை ப்ரார்த்தித்தாரிறே.

ஸ்ரீநந்தகோபர், பூதநா நிரஸநத்தாலே க்ருஷ்ணனுடைய திவ்ய ஶக்தியோகத்தைக் கண்டிருக்கச்செய்தேயும், ஶைஶவ ப்ரயுக்தமான ஸௌகுமார்யத்தையே பார்த்துக் கலங்கி வயிறெரிந்து, 566 "ரக்ஷது த்வா மஶேஷாணாம் பூதாநாம் ப்ரபவோ ஹரி: - யஸ்ய நாபி ஸமுத்பூத பங்கஜாத் அபவஜ் ஜகத்" என்று - "ஸர்வ ஜகத்காரண பூதனாய் ஸகல விரோதி நிரஸநஶீலனான ஸர்வேஶ்வரன் உம்மை ரக்ஷிப்பானாக" என்று ரக்ஷை யிட்டாரிறே.

ஸ்ரீவிதுரர், க்ருஷ்ணனுடைய ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வாதி களை யறிந்திருக்கச்செய்தேயும், துர்யோதந கோஷ்டியில் எழுந்த ருளினபோது பொய்யாஸநமிட்டபடியைக் கண்டஞ்சி ப்ரேமாந்த தையாலே, 567 "ஸமஸ்ப்ருஶந் ஆஸநம் ஶௌரேர் விதுரஸ் ஸ மஹாமதி:" என்று - தம்முடைய திருமாளிகையில் தாமிட்ட வாஸ நத்தையு மதிஶங்கை பண்ணித் தன்கையாலே யமுக்கிப் பார்த் தாரிறே.

பிள்ளையுறங்காவில்லிதாஸர், அத்தலையில் ஜ்ஞாந ஶக்த்யாதிக ளெல்லா மறிந்து, "பெருமாள் நமக்கு ரக்ஷகர்" என்றிரா நிற்கச் செய்தேயும், ப்ரேம பரவஶராகையாலே, "பெருமா ளுலாவி யரு ளும்போது எங்கேனு மொருசலநம் பிறக்கில நமப்ராணனை விடு மித்தனை" என்று † சொட்டையை யுருவிப் பிடித்துக்கொண்டு ஸேவிப்பரென்று ப்ரஸித்தமிறே.

(துடக்கமானவர்கள்) என்கிற வித்தால் - 568 "ஸ்த்ரியோ வ்ருத்தாஸ் தருண்யஶ்ச ஸாயம் ப்ராதஸ் ஸமாஹிதா:-ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யஶஸ்விந:" என்கிற திருவயோத்யா வாஸி ஜநங்கள்; 569 "யந் மங்களம் ஸுபர்ணஸ்ய விநதா கல்பயத் புரா - அம்ருதம் ப்ரார்த்தயாநஸ்ய தத்தே பவது மங்களம்" என்ற ஸ்ரீகௌஸல்யையார்; 570 "ஜாதோஸி தேவதேவேஶ ஶங்கசக்ர கதா தர: - திவ்ய ரூப மிதம் தேவ ப்ரஸாதே நோபஸம்ஹர" என்ற

* பையல் - க்ஷுத்ரன். † சொட்டை - ஓராயுதம்.

ஸ்ரீவஸுதேவர்;[571] "உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதச் சதுர்புஜம்- ஜாநாது மாவதாரந்தே கம்ஸோயம் திதி ஜந்மஜ:" என்கிற தேவகிப் பிராட்டி முதலானோரை யெல்லாம் நினைக்கிறது.

247. அவ:—இவ்விஷய வைலக்ஷண்ய மெல்லாரையும் மங்களாஸாஸநத்திலே மூட்டுமெனனுமிடத்துக் கின்னமொரு உதாஹரணம் காட்டுகிறார்.

மூ:—247 இளையபெருமாளை ஸ்ரீகுஹப்பெருமா ளதிஸங்கை பண்ண, இருவரையு மதிஸங்கை பண்ணி ஸ்ரீகுஹப்பெருமாள் பரிகரம் பெருமாளை நோக்கிற்றிறே.

வ்யா:—(இளையபெருமாளை) என்று துடங்கி. அதாவது-ஸ்ருங்கிபேரபுரத்திலே யெழுந்தருளி ஸ்ரீகுஹப்பெருமாளை விஷயீகரித்தருளினவன்று, பாங்கறிந்து இளையபெருமாள் படுத்துக்கொடுத்த பாணஸய்யையிலே பெருமாளும் பிராட்டியும் பள்ளிகொண்டருளா நிற்க, பாலயாத்ப்ரவ்ருத்தி ஸுஸங்கதராகையாலே என்வருகிறதோ வென்றஞ்சி, முதுகிலிட்ட அம்பறாத்தூணியும் கட்டினவிரற்சரடும் நாணியேறிட்டு நடுக்கொத்துப் பிடித்த விலலும் தாமுமாய் நடையாடும் மதிள்போலே வளையவருகிற விளையபெருமாளைக் கண்டு, ஸ்ரீகுஹப்பெருமாள், ஒரு தம்பிதாயைக்கொண்டு ராஜ்யத்தைவாங்கி கட்டினகாபபோடே காட்டிலேதள்ளிவிட்டான், இவனுமவவோபாதி யொருதம்பியன்றோ, தனியிடத்திலே என்செய்ய நினைத்திப்படி யாயத்தமாய நின்றானென்று தெரியாது என்றதிஸங்கை பண்ணி, அப்படியேதேனுமொருதீங்குநினைக்கில இவன்றனனைத் தீரக்காண்க கடவோமென்று வில்லும் கோலுமாயக்கொண்டு இவரிட்டவடியிலே யடியிட்டுநிற்க ; ஸ்ரீகுஹபபெருமா ளேவறஞ்றேழிற்செய்து திரியும் பரிகரம், "அவன்ஜ்ஞாதி, இவனகுறும்பனவன்னியன், இவர்களிருவருமாக விவ்விஷயத்தை என்செய்யத்தேடுகிறார்களோ" என்று இருவரையுமதிஸங்கைபண்ணி, அப்படிசெய்யில் இவர்களையழியச் செய்தும் நாமத்தலையை நோக்கக்கடவோமென்று தனித்தனியே கையும் வில்லுமாயக்கொண்டு பெருமாளை ரக்ஷித்ததிறே என்கை.

ஸ்ரீபரதாழ்வானுக்கு விஸேஷம் சொல்லுகிற விடத்திலே, ஸ்ரீகுஹப்பெருமாள் [572] "நியம்ய ப்ருஷ்டேது தலாங்குளித்ரவாந்ஸரைஸ் ஸுபூர்ணாவிஷுதிம் பரந்தப: - மஹத்தநுஸ் ஸஜ்ய

மபோஹ்ய லக்ஷ்மணோ நிஶாமதிஷ்ட்டதத வரிதோஸ்ய கேவலாம் - ததஸ் த்வஹஞ்சோததம சாபபாணபருத ஸ்திதோபவம் தத்ர ஸயதாலக்ஷ்மணः - அநநதரிபிர் ஜனாதிபிராத்த கார்முகை மஹேந்த்ரகலபம் பரிபாலயம் ஸ்ததா" என்றதை ராதரியில வருததாந் தத்தைச சொனனுனிறே.

248. அவ.—ஸ்ரீகுஹபெருமாளுககும பரிகாரததுக்கு மன்று கண்டமாதரமொழிய பெருமாளுடன் முன்பு வாஸனையில்லையே; இபபடியிருக்கசசெய்தே, இவர்களுக கிவ்வாகாரம் கூடினபடியென் னென்ன வருளிசசெய்கிறா.

## மூ —248 ஒருநாள் முகத்திலே விழித்தவர்களை வடிவழகு படுத்தும்பாடாய்த்திது.

வயா:—(ஒருநாள்) என்று துடஙகி. அதாவது - நெடுநாள் வாஸனைபண்ணுகையன்றிக்கே ஒருநாள் முகதர்ஶநம் பண்ணின வர்களையும் அவன் விகரஹவைலக்ஷண்யம படுத்துமபடியாய்த் திதுவென்கை. ஸதாபஶ்யநதி பணணினுரோபாதி ஸக்ருத் தர்ஶநம் பண்ணினுரையும் பரேமாநதராய அஸ்தானே பயஶங்கையாலே அநுகூலரையு மதிஶங்கைபண்ணிப பரிநது நோககுமபடி பண்ண வற்றாயிறே பகவதவிகரஹ ஸௌநதர்ய மிருபபது. 31-1-43

249. அவ —இன்னமு மிவ்வர்தததத்துக்கு உதாஹரணமாக, கீழ்சசொன்னவாகளிற்காட்டில வயாவ்ருததரான ஆழ்வார்களு டைய மங்களாஶாஸந நிஷ்டடையை யருளிசசெய்கிறார்.

## மூ —249 இவர்கள் நம்முடைய கோடியிலே யென்னும் படியாய்த்து ஆழ்வார்கள் நிலை.

வயா·—(இவர்கள்) என்று துடஙகி, (இவர்கள்) என்று - சக்ரவர்ததி முதலாகக் கீழ்சசொன்ன வதிகாரிகளைபடைய பராமர்ஶிக் கிறது. ஆனுல் பிராட்டியையுமொககச சொலலலாமோ வென்னில; ஆழ்வாாகளில தலைவரான நம்மாழ்வாரிலுங காட்டில் பெரியாழ் வார்க் கேற்றம் சொல்லுகிறவோபாதி, போக பரவஶையான வவளிற்காட்டில் மங்களாஶாஸநததி லூறறத்தாலே ஆழ்வார்களுக் கேற்றம் சொலலக குறையில்லை. ஆனுலும், (நம்முடைய கோடியிலே) என்னலாமோ வென்னில்; இவ்வர்த்தநிஷ்ட்டையி லவர்களுடைய வாதிக்யத்தை தர்ஶிப்பிக்கைக்காகச சொன்னதாகையாலே

விரோதமில்லை. ஆகையால இவ்விஷய வைலக்ஷண்ய கலுஷசித்தராய் இதுக் கென்வருகிறதோ வென்று பரிந்து நோககினவாகளாகக் கீழச்சொல்லபபட்டவர்க ளெலலாரு மென்றபடி. (நம்முடைய கோடியிலே என்னுமபடியாய்த்து) என்றது - இவ்விஷயத்திலே யநவிததிருககசசெய்தேயும பரேமாபாவததாலே மஙகளாஶாஸ நததி லூற்றமற்றிருககிற நமபோலவாராமாதரமென்று சொலலலாம படியாய்த் தென்றபடி. (ஆழவாாகள் நிலை) என்றது - 27 மயாவற மதிநலம் பெற்றவர்களாகையாலே நிரதிஶய பரேமயுகதரான வாழ வார்களுடைய மஙகளாஶாஸந நிஷ்ட்டை யென்றபடி.

250. அவ:—இவவாழ்வாாகள்தாஙகள்* மஙகளாஶாஸநததில் வநதால தஙகளி லொபபர்களோ வென்ன வருளிசசெயகிறா மேல.

மூ—250 ஆழ்வார்களெல்லாரையும் போலல்லர் பெரியாழ்வார்.

வ்யா·—(ஆழவாாகள்) என்று துடஙகி. அதாவது - மங்களாஶாஸநததில மற்றுள்ள வாழவாாகளுககும் பெரியாழ்வாருக்கும நெடுவாசி யுண்டென்கை.

251. அவ·—அவாகளைபபற்ற விவாககிதி லேற்றமேதென்ன வருளிசசெய்கிறா.

மூ:—251 அவர்களுக் கிது காதாசித்கம், இவர்க்கிது நித்யம்.

வ்யா·—(அவர்களுககிது) என்று துடஙகி. அதாவது - 27 மயர் வற மதிநலம் பெற்றமை யொத்திருககசசெய்தே, வயிரவுருககாய் ஆண்களையும் பெண்ணுடை யுடுததும் பகவத விக்ரஹவைலக்ஷண்யத்தை யநுஸந்தித்தால, உததரோத்தராநுபவ காமராகாநிறகும் மற்றை யாழவாாகளுக்கு, பாஸம்ருததியே பரயோஜநமான விநத மங்களாஶாஸநம் எபபோதாமொகக வின்றிககே எங்கேனு மொரு தஶையிலே தேடிபபிடிக்கவேண்டுமபடியா யிருக்கும் ; ததவைலக்ஷண்ய தாஶநாநநதரம் ததநுபவபராாகை யன்றிக்கே, அஸ்தாநே பயஶங்கை பண்ணித் திருப்பலலாண்டு பாடும் பரேம ஸ்வபாவரான விவர்க்கிநத மங்களாஶாஸநம ஸாவகாலவர்ததியாய்ச செல்லு மென்கை.

252. அவ:—அதுக்கு ஹேது வென்னென்ன வருளிசசெய்கிறார்.

மூ—252 அவர்களுடைய வாழுங்கால்தானே இவர்க்கு மேடாயிருக்கும்.

வயா—(அவர்களுடைய) என்று துடங்கி. அதாவது - அநுபவ பரரான அவர்களை த்ருஷ்டிசித்தாபஹாரம பண்ணி ஆழுங்கால படுத்து மவனுடைய ஸௌந்தர்யந்தானே, அதுக கென்வருகிறதோ! என்றஞ்சி மேன்மேலும் காபபிடும்படி மங்களாஸாஸநபரரான இவர்க்கு தரித்துநின்று மங்களாஸாஸநம பண்ணுகைககிடான நிலமாயிருக்கு மென்கை.

253. அவ.—அதெங்ஙனேயென்னு மபேக்ஷையிலே யருளிச செய்கிறார.

மூ—253 அவர்களுக்கு உபய ஶேஷத்வத்தையு மழித்து ஸ்வரூபத்தைக் குமிழ் நீருண்ணப் பண்ணுமது, இவர்க்கு உபய வ்ருத்திக்கும் ஹேதுவாய் ஸ்வரூபத்தைக் கரையேற்றும்.

வயா—(அவர்களுக்கு உபய ஶேஷத்வத்தையும்) என்று துடங்கி. அதாவது - பகவதநுபவைகபரராய் ததலாபததி லாற்றாமை கரைபுரளும்படி யிருக்கும் மற்றை யாழ்வார்களுக்கு, 573 "கண்ண புரமொன்றுடையானுக கடியே னொருவாக குரியேனோ" என்றும் 574 "உற்றது முனனடியாாக கடிமை" என்றும் அநுஸந்திக்கும்படி பரதம மத்யமபத ஸித்தமான பகவச்சேஷத்வமும், தத்காஷ்டையான பாகவதஶேஷத்வமுமாகிற உபய ஶேஷத்வத்தையும், 575 "நமக்கே நலமாதலில்" என்னும்படி ஸ்வப்ரயோஜநத்திலே மூட்டியும், விளமபரோக்ஷததாலே 270 "போகுநமபீ" 271 "கழகமேறேல நமபீ" என்னும்படியாக்கியும, ஸ்வப்ரவ்ருத்தி யாகாதென்னுமளவில 576 உங்களோ டெங்க ளிடையிலலை" என்று உதறும்படி பண்ணியும, 577 "வெஞ்சிறைபபுள்" இதயாதியாலே வெறுதது வார்த்தை சொலலுவித்து மழித்து, பராதிஶயகரதவமே வடிவான ஸ்வரூபத்தை மங்களாஸாஸநமென்பதொன் றறியாதபடி தன்பக்கலிலே மக்நமாகப பண்ணுமதான பகவத் ஸௌந்தர்யம்; அந்த ஸௌந்தர்ய தர்ஶநத்தில் அநுபவத்திலே நெஞ்சு செல்லாதே அதுக்கென் வருகிறதோ வென்று வயிறெரிந்து காபபிடுமவரான இவர்க்கு, 578 "உன்சேவடிசெவ்வி திருக்காப்பு" 579 "மங்கையும் பல்லாண்டு" "சுடராழியும பல்லாண்டு" "பாஞ்சசன்னியமும் பல்லாண்டு" என்று

தத்விஷயத்துக்கும் ததீயவிஷயத்துக்கும் மங்களாஸாஸநம் பண்ணு விக்கையாலே, உபய ஶேஷத்வவ்ருத்திக்கும் ஹேதுவாய், ஸ்வரூபத்தைத் தன்பக்கல் மக்நமாகாதபடி நடத்துமென்றபடி. ஆக, அவர்களுக் கப்படி ஸ்வரூபத்தைக் குமிழ்நீருண்ணப் பண்ணுகிறவனுடைய ஸௌந்தர்யம் இவர்க்கிப்படி செய்கையாலே அவர்களுடைய வாழுங்கால்தானே யிவர்க்கு மேடாயிருக்கையால், அவர்களுக்குப் போலே காதாசித்கமாகையன்றிக்கே மங்களாஸாஸந மிவர்க்கு நித்யமாய்ச் செல்லுமென்றதாய்த்து.

254. அவ:—மற்றை யாழ்வார்களுக்கு மங்களாஸாஸநம் காதாசித்கமாகச்செய்தே இவர்க்கு நித்யமாகைக்கு நிதாந மின்னதென்று தர்ஸிப்பித்தார் கீழ்; இதுதா னிவர்க்கு நித்யமாய்ச் செல்லும்படி தன்னை வ்யக்தமாக வருளிச்செய்கிறார் மேல்.

**மூ:—254 பய நிவர்த்தகங்களுக்கு பயப்படுவது, ப்ரதிகூலரையு மநுகூலராக்கிக்கொள்வது, அதீத காலங்களி லபதாநங்களுக்கு உத்தரகாலத்திலே வயிறெரிவது, ப்ராப்திபலமு மிதுவே யென்பது, அநிமிஷரைப் பார்த்து [580] "உறகலுறகல்" என்பதாய்க்கொண்டு இது தானே யாத்ரையாய் நடக்கும்.**

வ்யா:—(பய நிவர்த்தகங்களுக்கு) என்று துடங்கி- அதாவது- தன் ஸௌகுமார்யத்தைக் கண்டு கலங்கி இவ்விஷயத்துக்கென்வருகிறதோவென்று மறுகுகிற விவர் பயத்தைப் பரிஹரிக்கைக்காக மல்லவர்க்கத்தை யநாயாஸேந வழித்த தோள்வலியைக் காட்ட, இநதத் தோள்வலியை நினைத்து மதியாதே அஸுர ராக்ஷஸ யுத்தத்திலே புகுரில் என்னாகைக்கடவது என்று அது தனக்கு பயப்பட்டு மங்களாஸாஸநம் பண்ணுவது ; உண்டான வமங்களங்கள் போகைக்கும் இல்லாத மங்களங்க ளுண்டாகைக்கும் தன்கடாக்ஷமே யமைந்திருக்கிற விவள் [581] "அகலகில்லேனிறையும்" என்று நம்மைப் பிரியமாட்டாதேயிருக்க நமக்கு வருவதொரு வமங்களங் ளுண்டோ! என்செய்யப் படுகிறீர்! என்று லக்ஷ்மீஸம்பந்தத்தைக் காட்ட, இச்சேர்த்திதனக் கொருதீங்குவரிற் செய்வதென் என்றஞ்சி, [579] "மங்கையும் பல்லாண்டு" என்று மங்களாஸாஸநம் பண்ணுவது ; இந்த பயத்தைப் பரிஹரிக்கைக்காக இச்சேர்த்திக் கொருதீங்கு வாராத

படி கலமதிளிட்டாபபோலே யிருககிற விவாகளைப பாரீரென்று இரண்டிடததிலு மேநதின வாழ்வாாகளைககாட்ட, அவாகள் தஙக ளுக கொருதீஙகுவாிற செய்வதென் எனறஞசி, 579 "சுடராழியும் பலலாணடு" "பாஞசசன்னியமும பலலாணடு" என்று மஙகளாஸா ஸநம பண்ணுவது; அநநய பரயோஜநதயா அநுகூலரான பகவச் சரணர்ததிகளை மஙகளாஸாஸநததுககுத துணையாகக கூட்டிக் கொணடவளவாலே பாயாபதி பிறவாமையாலே, பரயோஜநாநதர பரதயா பரதிகூலரான கேவலரையும ஐஸவாயார்ததிகளையும் திரு ததி மஙகளாஸாஸநததுக் காளாமபடி யநுகூலராககிக கொள்வது; 582 "இலங்கை பாழாளாகப படை பொருதானுக்குப பல்லாண்டு கூறுதும" இதயாதியாலே - கிழ கழிநத காலததி லவன்செயத வபதாநஙகளுககுப . பிறகாலத்திலே ஸமகாலததிறபோலே வயி றெரிநது மஙகளாஸாஸநம பணணுவது; 583 "சூழநதிருநதேதது வா பலலாணடு" எனறு பகவத பராபதிககு பலமு மிநதமங்களா ஸாஸநமே யென்பது; 584 "ஸ்நேஹா தஸததா நரகூா வ்யஸநிபி ரபயம ஸார்ஙக சகராஸி முக்யை:" எனகிறபடியே - அஸ்தாநே ரகூா வயஸநிகளாகையாலே அநிமிஷரா யிருக்கிற திவயாயுதாழ் வாாகள் முதலானைப பாரதது குணவிததராய நஞசுண்டாரைப போலே உநதாமை யறியாதிருததல அநுபவததிலே யிழிநது கைங் காயபரரா யிருத்தல செயயாதே உணர்நது நோககுஙகோளென்று பலகாலும் சொல்லுவதாயகொண்டு இமமங்களாஸாஸநமே வ்ரு ததியாய்ச செலலுமென்கை.

255. அவ—இபபடி மஙகளாஸாஸநததுக காள்தேடி ப்ரதி கூலரை யநுக்கூலராககுகைக்குப பண்ணுகிற வுபதேஸம திருபபல் லாண் டொன்றிலுமன்றே வுளளது, மேலிவ ருபதேஸிதத விடங களில அலலாதா ருபதேஸத்திற்காட்டில வயாவருததி என்னென் கிற ஸங்கையிலே யருளிச்செயகிறார்.

மூ—255 அல்லாதவர்களைப்போலே கேட்கிறவர்களு டையவும் சொல்லுகிறவர்களுடையவும் தனி மையைத் தவிர்க்கையன்றிககே, 585 "ஆளு மாளார்" என்கிறவனுடைய தனிமையைத் தவிர்க்கைக்காகவாயத்து பாஷ்யகாரரு மிவருமுபதேஸிப்பது.

வ்யா:—(அல்லாதவர்களைப்போலே) என்று துடங்கி. அதாவது பரோபதேசத்தில் வந்தால், மற்றுள்ள ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும்போலே உபதேசிக்கிறவர்த்தம் கேட்கிற ஸம்ஸாரிகளுடைய வநாத்யஜ்ஞாநத்தாலே நற்றுணையான பகவத்விஷயத்தை யகன்று திரிகையால் வந்த தனிமையையும், வக்தாக்களான தங்களுடைய பகவத்குணாநுஸந்தாந தசையிலே போதயந்தஃ பரஸ்பரம் பண்ணுகைக்கு உசாத்துணை யில்லாமையால் வந்த தனிமையும் தவிர்க்கை ப்ரயோஜநமாக உபதேசிக்கையன்றிக்கே, ஸௌகுமார்யாநுஸந்தாநத்தாலே வயிறுமறுகின ஆழ்வார் ராராய்ந்து பார்த்த விடத்திலுடைய அநந்யபரார்த்த தோற்றுகையாலே, உபய விபூதியிலும் பரிகைக்காளில்லை, தம் வாசியறிந்து பரிந்துநோக்குகைக்கும் ஓராளு மாளுகிறிலரே யென்று பேசும்படி யிருக்கிற நிரதிசய ஸௌகுமார்யயுக்தனான ஸர்வேச்வரனுடைய தனிமைதீர மங்களாசாஸநத்துக்கு ஆளாகவேணுமென்னு மிதுவே ப்ரயோஜநமாக வாய்த்து, ப்ராமாணிகரான ஆசார்யர்களில் பாஷ்யகாரரும் [27] மயர்வற மதிநலம் பெற்றவர்களி லிவ்வாழ்வாரு முபதேசித்தருளுவதென்கை. ஆகையால் இவ்வாழ்வார் ப்ரதிகூலரை அநுகூலராக்க உபதேசிக்குமிடமெல்லாம் மங்களாசாஸநார்த்தமாக வென்னக் குறையில்லை யென்று கருத்து. எம்பெருமானாரென்னாதே, பாஷ்யகாரரென்றது - ஸ்ரீபாஷ்யமுகத்தாலே வேதாந்த தாத்பர்ய நிர்ணயம் பண்ணி யருளினவ ரென்னும் வைபவந் தோற்றுகைக்காக.

256. அவ.—[27] மயர்வற மதிநலம் பெற்றவர்களெல்லார்க்கும் ஸத்தாஸம்ருத்திகள் பகவத் தர்சநாநுபவ கைங்கர்யங்களாலே யாக வன்றோ தோற்றுகிறது, அவ்வாகார மிவர்க்கு மொவ்வாதோ, அப்போதைக்கு மங்களாசாஸநமே யாத்ரையாக நடக்குமென்னு மிது கூடும்படி எனனென்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார்.

**மூ:—256 அல்லாதார்க்கு ஸத்தா ஸம்ருத்திகள் தர்சநாநுபவ கைங்கர்யங்களாலே; இவர்க்கு மங்களாசாஸநத்தாலே.**

வ்யா:—(அல்லாதார்க்கு) என்று துடங்கி. ஸத்தையாவது தாங்க ளுளராகை. இது பகவத் தர்சநாநுபவ கைங்கர்யகாமரான மற்றை யாழ்வார்களுக் கவையை காணாதபோது தரிக்கமாட்டாதே, காணவாரா யென்றென்று கூப்பிடுகையாலே, தத்தர்சநத்தாலேயா

பிருக்கும்; 586 "அவராவி துவராமுன் - அவர் வீதியொருநாள் - அருளாழிப் புட்கடவீர்" என்று - எங்கள் ஸத்தை கிடக்கைக்கு ஜாலக ரந்த்ரத்தாலேயாகிலு மொருக்கால் காணும்படி எங்கள் தெருவே யொருநாள் போகவமையுமென்று சொல்லலென்கையாலே, தர்ஶநமே ஸத்தாஹேது வென்னுமிடம் ஸித்தமிறே. ஸம்ருத்தியாவது) - உளராயிருக்கிறமாத்ர மன்றிக்கே மேலுண்டாய்ச் செல்லுந் தழைப்பு. அது அவர்களுக்கு "அந்தாமத்தன்பு" "முடிச்சோதி" தொடக்கமான வற்றிற்போ லுண்டான வநுபவத்தாலும், "ஒழிவில்கால" த்திற்படியே செய்யும் கைங்கர்யத்தாலுமாயிருக்கும். அன்றிக்கே, தர்ஶநாநுபவங்க ளிரண்டாலும் ஸத்தையும், கைங்கர்யத்தாலே ஸம்ருத்தியுமாகச் சொல்லவுமாம். அங்ஙனுமன்றிக்கே, (அந்த ஸத்தை ப்ராவண்ய கார்யமான வநுபவமில்லாதபோது குலையும்) என்று இவர்தாமே கீழே யருளிச்செய்கையாலும், நாளை விநியோகங் கொள்ளுகிறோ மென்னில் * அழுகவுங்கூட ஸத்தையில்லை என்று கைங்கர்யம் ஸத்தாஹேதுவாக வநுஸந்தாநத்திலே சொல்லுகையாலும், 587 "கண்டு களிப்பன்" என்று தர்ஶநந்தான ஸம்ருத்தி ஹேதுவாகவும் தோற்றுகையாலும், ஸத்தைக்கும் ஸம்ருத்திக்கும் மூன்றும் காரணமென்னவுமாம். 27 மயர்வற மதிநலம் பெற்ற வன்றுமுதல் பகவதௌஸுகுமார்யாதிகளைக் கண்டு இவற்றுக் கென்வருகிறதோ வென்று வயிறெரிந்து மங்களாஶாஸநாபிநிவிஷ்டரான விவர்க்கு, மங்களாஶாஸந விச்சேதம் வரில் தாமுளராக மாட்டாமையாலும், அப்படி யவிச்சிந்நமாய்ச் செல்லுமதுதானே தழைப்புக் குடலா யிருக்கையாலும், ஸத்தையும் ஸம்ருத்தியு மிரண்டும் மங்களாஶாஸநத்தாலேயா யிருக்கும்; ஆகையா லிவர்க்கு மங்களாஶாஸநம் நித்யமாய்ச் செல்லத் தட்டில்லையென்று கருத்து.

257. அவ — ஆக, மங்களாஶாஸநத்தில் பெரியாழ்வார்க்குண்டான அநவரத நிஷ்டையை தர்ஶிப்பித்தார் கீழ்; இனிமேல், இவருடைய யாத்ரையே நமக்கெல்லார்க்கும் யாத்ரையாகவேணுமென்று, (உகந்தருளின நிலங்களி லாதராதிஶயமும் மங்களாஶாஸநமும்) [243] என்று முன்பு திநசர்யையி லுக்தமான மங்களாஶாஸநத்தினுடைய அவஶ்ய கர்த்தவ்யதையை யருளிச்செய்கிறார்.

* "அழியவுங்கூட" என்றும் பாடங்காண்கிறது.

மூ—257 உகந்தருளின நிலங்களை யநுஸந்தித்தால் ஊணுமுறக்கமு மின்றிக்கே இவருடைய யாத்ரையே நமக்கெல்லார்க்கும் யாத்ரை யாக வேணும்.

வ்யா—(உகந்தருளின நிலங்களை) என்று துடங்கி. அதாவது - அத்யந்த ஸுகுமாரனான ஸர்வேஶ்வரன் ஆஶ்ரித ஸுலபத்வார்த்த மாகத் தன்னை யமைத்துக்கொண்டு 588 "தானுகந்தவூர்" என்னும் படிதா னதயாதரத்தைபபண்ணி வர்த்திக்கும் கோயில் திருமலை முதலான திவ்யதேஶங்களை யநுஸந்தித்தால், அபாய பஹுளமான தேஶமாகையாலே இங்கெழுந்தருளிநிற்கிற நிலைக்கு ஏதேனுமொரு தீங்குகள்வரி லென்னுகைகடவது என்னும் வயிறெரிச்சலாலே, ஆஹார நித்ரைகளிலு மநவயமின்றிக்கே நிரதிஶய ப்ரேமயுக்தரான விவவாழ்வாருடைய நிரந்தர மங்களாஶாஸந யாத்ரையே ஶேஷபூத ரான நமக்கெல்லார்க்கும் யாத்ரையாகவேணுமென்கை.

258. அவ.—உக்தார்த்தத்தை நிகமித்தருளுகிறார்.

மூ:—258 ஆகையாலே மங்களாஶாஸநம் ஸ்வரூபாநுகுணம்.

வ்யா.—(ஆகையாலே) என்று துடங்கி. அதாவது - இப்படி ஶேஷபூதரானவர்களுக்கெல்லாம் அவஶ்ய கர்த்தவ்யமாயிருப்ப தொன்றாகையாலே, மங்களாஶாஸநம் ஸ்வரூபத்துக்குச் சேரு மென்கை. ஶேஷ வஸ்துவாகில் ஶேஷிகதிஶயத்தை விளைத்தே தன் ஸ்வரூபஸித்தியாகையாலே, ஶேஷிகதிஶயத்தை யாஶாஸிக் கிற விது ஶேஷபூதனானிவனுடைய ஸ்வரூபத்துக் கநுகுணமிறே.

259. அவ—இப்படி திருச்சாயையி லுக்தமான மங்களாஶாஸ நத்தினுடைய ஸ்வரூப விருத்தத்வ ஶங்கையைப் பரிஹரித்த வநந் தரம், "அநுகூல ஸஹவாஸம்" என்றவிடத்திற் சொன்ன வநுகூல ருடைய லக்ஷணத்தை யருளிச்செய்கிறார்.

மூ:—259 அநுகூலராகிறார் - ஜ்ஞாந பக்தி வைராக்யங்கள் இட்டுமாறிணுப்போலே வடிவிலே தொடைகொள்ளலாம்படி யிருக்கும் பரமார்த்தர்.

வ்யா —(அநுகூலர்) என்று தொடங்கி. (அநுகூலராகிறார்) என்றது-ஜ்ஞாநாதி வாததகாரகையாலே ஸஹவாஸ யோக்யராகக் கீழ்ச் சொல்லப்பட்ட வநுகூலராகிறா ரென்றபடி. (ஜ்ஞாந பக்தி வைராகயங்களாவன) - ததவயாதாதம்ய ஜ்ஞாநமும, பகவதேக விஷயையான பக்தியும், ததுபய காரயமாய் வரும பகவத வயதிரிகதவிஷய விரகதியும, இவைதான் வைஷ்ணவாலங்காரங்களிறே. இவற்றையிட்டிறே ஸ்ரீவைஷ்ணவாகளுக கேற்றஞ சொல்லுவது. ஆகையிறே, நாதமுநிகளுடைய திவய வைபவத்தை யருளிசசெய்கிற ஆளவநதார், 589 "அசிநதயா த்புதாக்லிஷ்டட ஜ்ஞாந வைராக்ய ராஸயே-அகாத பகவத் பகதி ஸிநதவே" என்றருளிசசெயதது.

(இட்டுமாறினுப்போலே) என்றது - ஒரு பதார்ததமிருநத பாதரத்திலே பதாரத்தாநதரத்தை யிட்டு முன்பிருநததை மாறறினு லதுவே யுள்ளதாயத தோறறுமாபபோலே, இநத ஜ்ஞாநாதிகள் மூன்றும் ஏகாஸரயகதமா யிருக்கசசெய்தே. யிவறறிலேயொன்றையே பார்ககுமளவில் ஒன்றையிட்டு மற்றையவறறை மாற்றினுப் போலே இதுவே யிவவாஸரயததிலுள்ளதென்று தோற்றுமபடியிருககை. (வடிவிலேதொடைகொள்ளலாம்படி யிருககையாவது) - இவர்கள் வடிவு கண்டபோதே இவறறோ டிவாகளுக் குண்டான ஸம்பநதம கரஹிககலாமபடி யிருககை. தயாஜயோபாதேய விவேக பூர்வகமான பரிமாறறததாலே, ஜ்ஞாநம வடிவிலே தொடைகொள்ளலாம்; 590 "ஆஹலாத ஸீத நேத்ராம்புః" 591 "காணுமெழா கண்ண நீரு நிலலாது" இதயாதிபபடியே யிருக்கையாலே, பகதி வடிவிலே தொடைகொள்ளலாம; இதர விஷயங்களைக கடைக்கணியாம லிருககையாலே வைராகயம வடிவிலே தொடைகொள்ளலாம் அன்றிககே, ஜ்ஞாநபகதி வைராக்யஙகள் மூன்றும் நவநவோநமேஷஸாலிகளாய் வருகையாலே அபூர்வமான ஜ்ஞாநாதிகளையிட்டு பூர்வததி லவற்றை மாறறினுபபோலே, தங்கள் வடிவிலே யிவை காணலாமபடி யிருககும் பரமாாதத ரென்னவுமாம். (பரமார்ததர்) என்றது - ஸம்ஸாரததில பொருநதாமையாலும பகவதவிஷயத்தைக் கிடடப்பெறுமையாலும இனி யிதுக்குமேலில்லை யென்னும்படியான வார்த்தியை யுடையவர்களென்கை.

260. அவ:—இவர்களோட்டை ஸஹவாஸத்தால் ஸித்திக்குமதேதென்ன வருளிச்செய்கிறார்மேல்.

மூ.—260 ஒருசெய்நிரம்ப நீர் நின்றால் அசல்செய் பொசிந்து காட்டுமாப்போலே, இவை யில்லாதார்க்கு மிவர்களோட்டை ஸம்பந்தத்தாலே யுருவுதல் தீரக்கடவதாயிருக்கும்.

வ்யா —(ஒருசெய) என்று துடஙகி. அதாவது - ஒரு வயலிலே நிறைய நீரநின்றால நீரற்றுருவிககிடககிற வசல வயல ததாஸத்தியால வநத பொசிவாலே வாட்டமற்றுக கிடககுமாபபோலே, ஜ்ஞாந பகதி வைராகயஙகளாகிற விவை யிலலாமையாலே ஸவரூபமுருவிக்கிடககிறவர்களுககும இவறறால பரிபூர்ணரான விவாகளோட்டை ஸஹவாஸரூப ஸமபநதத்தாலே இவற்றிலே சிறிதநவயமுணடாய் இவை நேராக வில்லாமையாலுணடான வுருவுதல தீரககடவதா யிருககுமென்கை.

261. அவ·—ஏதத் ஸஹவாஸத்தால இபபடி உருவுதல தீநதுகிடககுமள்வோ வென்னில; இவவளவு மன்று, இநத ஸ்வபாவ விஶேஷஙகள் பராபதிககுமுன்னே பூரணமாக விளைநதறுமென்கிறார்.

மூ —261 ஆறுநீர் வர வணித்தால் அதுக்கீடான வடையாளங்க ளுண்டாமாப்போலே, ப்ராப்தி யணித்தானவாறே இந்த ஸ்வபாவ விஶேஷங்கள் தன்னடையே விளையக்கடவதா யிருக்கும்.

வ்யா:—(ஆறுநீ) என்று துடஙகி. அதாவது - வற்றிக்கிடக்கிற ஆறு நீ வரத்தாஸநநமானவாறே தத்ஸூசகமான மணல் பொசிகை முதலான வடையாளஙக ளுண்டாமாபபோலே, பகவத்ப்ராபதி யாஸநநையானவாறே தத்ஸூசகமான விநத ஜ்ஞாநாதி ஸ்வபாவ விஶேஷஙகள் ஸ்வயமேவ விளையககடவதா யிருக்குமென்கை.

262. அவ.—இவையிபபடி விளைநதுவரபபுக்கால் பராபதி யணிதமென்று தோறறியிருககுமோவென்ன வருளிசசெய்கிறார்.

மூ:—262 இவற்றைக்கொண்டு சரமஶரீரமென்று தனக்கே யறுதியிடலா யிருக்கும்.

வ்யா:—(இவற்றைக்கொண்டு) என்று தொடங்கி. அதாவது - இப்படி மேன்மேலும் * புதுக்கணித்து விளைந்துவருகிற ஜ்ஞாந பக்தி வைராக்யங்களைக்கொண்டு, "இனி நமக்கொரு ஶரீரபரிக்ரஹ மில்லை, இது சரம ஶரீரம்" என்று தனமநஸ்ஸுக்கே நிஶ்சயித்துக் கொள்ளலாயிருக்கு மென்கை.

263. அவ—ஆக, இப்படி ஸஹவாஸ விஷயமாக திநசாயை யிற்சொன்ன வநுகூலருடைய லக்ஷணத்தையும் தத்ஸஹவாஸ பலத்தையு மருளிச்செய்து, தத்நந்தரம ஸஹவாஸ நிவ்ருத்தி விஷய மாகச்சொன்ன ப்ரதிகூல ரின்னாரென்னுமிட மருளிச்செய்கிறார் மேல.

மூ—263 ப்ரதிகூலராகிறார் - தேஹாத்மாபிமாநிகளும், ஸ்வதந்த்ரரும், அந்யஶேஷபூதரும், உபா யாந்தரநிஷ்ட்டரும், ஸ்வப்ரயோஜநபரரும்.

வ்யா:—(ப்ரதிகூலராகிறார்) என்று தொடங்கி. (ப்ரதிகூலராகி றார்) என்றது - ஜ்ஞாநாதி நாஶகராகையாலே ஸஹவாஸயோக்ய ரல்லராகக் கீழ்ச்சொன்ன ப்ரதிகூலராகிறா ரென்றபடி. (தேஹாத் மாபிமாநிகள்) இத்யாதி. (தேஹாத்மாபிமாநிகளாகிறார்) - காண கிற தேஹத்துக்கவ்வருகே ஆத்மா வுண்டென்றறியாதே, தேஹ த்திலே அஹம் புத்தியைப்பண்ணி அத்தையே யாத்மாவாக வபி மாநித் திருக்குமவர்கள். (ஸ்வதந்த்ரராகிறார்) - தேஹாதிரிக்த மான வாத்மவஸ்துவை யறிந்திருக்கச்செய்தே அத்தைத் தனக் குரித்தாகவே நினைத்து ஒருவிஷயத்திலும் ஶேஷத்வத்துக் கிசை யாதவர்கள். (அந்யஶேஷபூதராகிறார்) - ஶேஷத்வத்தை யிசைந் திருக்கச்செய்தே அத்தை யப்ராப்த விஷயங்களிலே விநியோகித் திருக்குமவர்கள்.

(உபாயாந்தர நிஷ்ட்டராகிறார்)-ப்ராப்த ஶேஷிவிஷய ஶேஷத் வத்தை யுடையராயவைத்தே தத்ப்ராப்த்யுபாயம் தச்சரணாரவிந்த ஶரணாகதி என்றிருக்கை யன்றிக்கே, கர்மாத்யுபாயங்களைப் பற்றி நிற்கிறவர்கள். (ஸ்வப்ரயோஜநபரராகிறார்) - ப்ராப்தஶேஷிசரண கமலங்களை யுபாயமாகப் பற்றியிருக்கச்செய்தே தாங்கள் பற்றின பற்றை யுபாயமாக நினைத்தும், உபேயமான கைங்கர்யத்தை ஸ்வ

* புதுக்கணிப்பு - நவீநகாந்தி [நூதநத்வம்.]

போக்யமாக நினைத்து மிருக்கிறவர்கள். இப்படி யிருக்கிறவிவர்கள், ப்ரணவத்தில த்ருதீயாக்ஷரத்தாலே ஆத்மாவினுடைய தேஹாதிரிக்தத்தையும், ப்ரதமாக்ஷரத்தில சதுர்த்தியாலே - பகவச்சேஷத்வத்தையும, மத்யமாக்ஷரத்தாலே - தத்நயார்ஹத்வத்தையும், மத்யம பதத்தாலே அந்நய ஶரணத்வத்தையும், சரம பதத்தாலே - அந்நய போக்யத்வத்தையும் தாஸித்திருக்கு மதிகாரிக்கு ப்ரதிகூலரிறே.

264. அவ:—இந்தப்ராதிகூல்யத்தை யுபபாதிக்கைக்காக விவர்களுடைய விப்ரதிபத்தி நிபந்தநமான வுத்தேஶ்யாதி பேதங்களை யருளிச்செய்கிறார் மேல.

மூ:—264 இவர்களுக் குத்தேஶ்யரும் உபாயோபேயங்களும் பேதித்திருக்கும்.

வ்யா.—(இவர்களுக்கு) என்று துடங்கி. (உத்தேஶ்யராகிறார்) - ஆதரணீயர். அவர்களாகிறார் - இவ்விடத்தில ஸ்வாபிமதப்ரதரான வர்கள். (உபாயங்களாவன) - ஸ்வாபிமத புருஷார்த்த ஸாதநங்கள். (உபேயங்களாவன) - ஸ்வாபிமத புருஷார்த்தங்கள். இவை (பேதித்திருக்கையாவது) - தத்தத் விப்ரதிபத் யநுகுணமாக வேறுபட்டிருக்கை.

265. அவ:—அது தன்னை யடைவே யுபபாதிக்கிறார் மேல.

மூ.—265 தேஹாத்மாபிமாநிகளுக் குத்தேஶ்யர் தேஹவர்த்தகரான மநுஷ்யர்கள், உபாயம் அர்த்தம், உபேயம் ஐஹிக போகம்; ஸ்வதந்த்ரர்க் குத்தேஶ்யர் ஸ்வர்க்காதி போக ப்ரதர், உபாயம் கர்மாநுஷ்ட்டாநம், உபேயம் ஸ்வர்க்காதி போகம்; அந்யஶேஷபூதர்க் குத்தேஶ்யர் ப்ரஹ்ம ருத்ராதிகள், உபாயம் தத்ஸமாஶ்ரயணம், உபேயம் தத்ஸாயுஜ்யம்; உபாயாந்தர நிஷ்ட்டர்க் குத்தேஶ்யன் தேவதாந்தர்யாமியான ஸர்வேஶ்வரன், உபாயம் கர்ம ஜ்ஞாந பக்திகள், உபேயம் பகவதநுபவம்; ஸ்வப்ரயோஜநபரர்க் குத்தேஶ்யன் "நெஞ்சி

**ஞல் நினைப்பான் யவன்" என்கிறவன், உபாயம் ஸ்வகீய ஸ்வீகாரம், உபேயம் ஸ்வார்த்த கைங்கர்யம்.**

வயா.—(தேஹாத்மாபிமாநிகளுக்கு) என்று தொடங்கி. அதாவது - தேஹத்தையே தானாக வபிமாநித்திருக்குமவர்களுக்கு உத்தேஸ்யர், தாரக போஷக போக்ய பதார்த்தங்களையிட்டு தேஹத்தை நன்றாக வளர்த்துக்கொண்டுபோரும் மநுஷ்யர்; அபிமதஸித்திக்குபாயம், ஸ்வார்ஜிதியான தநம்; அபிமதமான உபேயம், இஹலோகத்தி லுண்டான ஸ்த்ரீயந்நபாநாதி விஷயாநுபவம்; தேஹாதிரிக்தனை யிருப்பானொரு ஆத்மா உளன் அவனுடைய ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வ யுக்தனை யிருக்கு மென்கிறமாத்ரத்தை ஶாஸ்த்ரமுகத்தாலே யறிந்து தங்களை ஸ்வதந்த்ரராக நினைத்திருக்கு மவர்களுக்கு உத்தேஶ்யர், அநுஷ்டித்த ஸாதநத்துக்கநுகுணமாக ஸ்வர்காத்யாமுஷ்மிக போகங்களைக்கொடுக்கு மக்நீந்த்ராதி தேவதைகள்; உபாயம் 592 "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்ககாமோ யஜேத" இத்யாதிகளாலே சொல்லப்படுகிற பலாபிஸந்தி ஸஹிதமான யாகாதி காம்யாநுஷ்டாநம்; உபேயம், விஹித போகாத் விலக்ஷணமான ஸ்வர்காத்யநுபவம்; ஜகத்து தெய்வாதீந மென்னுமதை ஶாஸ்த்ரங்களிற் கேட்கையாலே ஶேஷத்வத்தை யிசைந்துவைத்தே பரதேவதாபர்யந்தமாகப்போக வறியாதே, * ஆபாதப்ரதீதி ஸித்தங்களிலே ஒன்றைப்பற்றி நிற்கு மந்யஶேஷபூதர்க் குத்தேஶ்யர் ஜகத்ஸ்ருஷ்ட்யாதி கர்த்ருதயா ப்ரதிபந்நரான ப்ரஹ்ம ருத்ராதிகள்; உபாயம் தூராராத்யரானவர்கள்பக்கல் பண்ணும் துஷ்கர ஸமாஶ்ரயணம், உபேயம், அவர்களோடு ஸமாநபோகயுணையாகிற ஸாயுஜ்யம்; 593 "ஸாயுஜ்யமுபயோர்த்ர போகதவயஸ்யா விஶிஷ்டதா - ஸாரூப்யதா தத்ர போக்ஸ்ய தாரதம்ய விஹீநதா" என்னக்கடவதிறே. ஆத்மஸ்வரூபம் பகவதநந்யார்ஹ ஶேஷமென்னுமிடத்தை வேதாந்தமுகேந வறிந்துவைத்தே அபிமதலாபத்துக் கவன்றன்னையே யுபாயமாகப் பரிக்ரஹிக்க வறியாதே உபாயாந்தர நிஷ்டரானவர்களுக்கு உத்தேஶ்யன் அக்நீந்த்ராதி தேவதைகளுக் கந்தர்யாமியான ஸர்வேஶ்வரன். இது காம்யயோகத்துக்கு ஸ்வரஸம் ஜ்ஞாநயோக பக்தியோகங்களுக்கு அஸாதாரண விஷயத்வமுண்டேயாகிலும் கர்மாநுஷ்டாநம் ப்ரதாநமாக வெழுந்திருந்தவையாகையாலும், கர்மாராத்யனானவனே ஸ்வாஸாதாரண

* ஆபாத ப்ரதீதி - மேலெழத் தோற்றும் அர்த்த ஜ்ஞாநம்.

விக்ரஹவிஶிஷ்டவேஷத்தை நமக்கு ப்ரகாஶிப்பித்தானென்னும் நினைவு நடக்கையாலும், தேவதாந்தராமியே யுத்தேஶ்யனுக்கச் சொல்லுகிறதென்று கொள்ளவேணும். உபாயம், தனித்தனி மோக்ஷஸாதநதயா ஶாஸ்த்ரவிஹிதங்களான கர்ம ஜ்ஞாந பக்தி யோகங்கள்; இவை தனித்தனி யுபாயமாமிடத்தில் ஒரொன்றுக்கு மற்றையவை யிரண்டு மங்கமா யிருக்கும். 594 "ஜ்ஞாந பக்த்யந் விதம் கர்ம ஜநகாதிஷு த்ருஶ்யதே - கர்ம பக்த்யந்விதம் ஜ்ஞாநம் ப்ராயேண பரதாதிஷு - கர்ம ஜ்ஞாநாந்விதா பக்தி: ப்ரஹ்லாத ப்ரமுகாஶ்ரயே" என்னக்கடவதிறே. அன்றிக்கே, (கர்மஜ்ஞாநபக்தி கள்) என்கிற விடத்திலே, வேதாந்தமர்யாதையாலே கர்மஜ்ஞாநாநு க்ருஹீதையான பக்தியே யுபாயமாய், தத்ங்கதயா கர்மஜ்ஞாநங்களை யுபாயமென் றுபசரித்துச் சொல்லுகிறதாகவுமாம்.

உபேயம், 595 "ஸோ ஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹப்ரஹ்மணா விபஶ்சிதா" இத்யாதி ஶ்ருதிகளாலும், 596 "நிரஸ்தாதிஶ யாஹ்லாத ஸுகபாவைக லக்ஷணா - பேஷஜம் பகவத் ப்ராப்தி ரேகாந்தாத்யந்திகீ மதா இத்யாதி ஶ்ருத் யுபப்ருஹ்மணங்களாலும் சொல்லப்படுகிற நிரதிஶயாநந்தரூப பகவதநுபவம். இந்த ஶ்லோ கத்தில் "பகவத்ப்ராப்தி:" என்கிறவிது பகவதநுபவமாகவிறே நம் மாசார்யர்கள் ஸ்வப்ரபந்தங்களிலே யருளிச்செய்தது. கர்மாத் யுபாயங்களில் துஷ்கரத்வபுத்தியாலே யவற்றை விட்டு ஸுகரத்வ புத்தியா ப்ரபத்தியிலே யிழிந்த ஸ்வப்ரயோஜநபரராக குத்தேஶ்யன், 597 "நெஞ்சினால் நினைப்பான் யவன்" என்கிறபடியே - ஆஶ்ரிதர்கள் நெஞ்சாலே யாதொரு த்ரவ்யத்தைத் தனக்குத்திருமேனியாகக் கோலினார்கள், அத்தையே தனக்குத் திருமேனியாக வபிமாநித்து அதிலே அப்ராக்ருத விக்ரஹத்தில் பண்ணு மாதரத்தைப் பண் ணிக்கொண்டு அத்யந்த ஸுலபனாயிருக்கிற வர்சாவதாரமான ஸர் வேஶ்வரன்; உபாயம், அநிஷ்ட நிவ்ருத்திக்கு மிஷ்டப்ராப்திக்கு மவனை யுபாயமாக நினைத்து தான் பற்றினபற்று; உபேயம், தனக் குக்கப்பாகப் பண்ணும் கைங்கர்யம்.

266. அவ.—ஆக, உத்தேஶ்யாதிபேதத்தாலே யிவர்களுக்குண் டான அந்யோந்ய விஶேஷத்தை தர்ஶிப்பித்தார் கீழ்; இவர்களில் பகவத்விஷயத்தோடு ஒட்டற்றின்ற மூவர்க்குமபகவத்விஷயத்தையே பற்றிநின்ற விருவருக்குண்டான விஶேஷத்தை தர்ஶிப்பிக் கிறார் மேல்.

மூ—266 முதல்சொன்ன மூவரும் நிக்ரஹத்துக் கிலக்கு; மற்றை யிருவரும் அநுக்ரஹத்துக் கிலக்கு.

வயா—(முதலசொன்ன மூவரும) என்று துடஙகி. அதாவது-தேஹாத்மாபிமாநமும் ஸ்வஸ்வாதந்த்ரயமும் அநயஸேஷத்வமு மாகிற விவற்றுக கவவருகொன் றறியாமையாலே, பகவநநவயகந ரஹிதரான மூவரும, 72 "க்ஷிபாமி" எனகிற பகவந நிகரஹத குககு விஷயம; பரகருதே:பரமாய பகவதநயாரஹஸேஷமான ஸ்வரூபததை யறிநது பகவதநுபவ கைங்காயஙகளை புருஷாரத்த மாகக்கொள்ளுகையாலே அநநய பரயோஜநராய, கரமஜ்ஞாநாதிக ளான வுபாயாநதரஙகளிலும் பரபதநததிலும நிஷ்ட்டரான விரு வரும், 598 "ததாமி" 196 "மோக்ஷயிஷயாமி" எனகிற பகவத நுகரஹத்துக்கு விஷயமென்கை.

267. அவ—இவாகளுக்கு காமவிநாஸ ஹேதுபேதத்தால வநத விஸேஷஙகளை தர்ஸிபபிககிறார மேல.

மூ—267 மூவருடையவும் கர்ம மநுபவ விநாஶ்யம்; நாலாமதிகாரிக்கு ப்ராயஶ்சித்த விநாஶ்யம்; அஞ்சாமதிகாரிக்கு புருஷகார விநாஶ்யம்.

வ்யா.—(மூவருடையவும) என்று துடங்கி. அதாவது - நிக்ர ஹத்துக் கிலக்கான மூவருடையவும் அநாதிகாலார்ஜிதமான ஸத ஸத் கர்மம், 599 "அவஶ்ய மநுபோக்தவ்யம் க்ருதம் காம ஶுபா ஶுபம் - நாபுக்தம க்ஷீயதே காம கலபகோடி ஶதைரபி" என்கிற படியே - அவஶயம தத்பலமுள்ளது அநுபவிததாலன்றி நசியாமை யாலே, (அநுபவவிநாஶயம) என்கிறார். அநுகரஹத்துக கிலககாகச சொன்ன விருவரிலும வைத்துககொண்டு, உபாயாநதர நிஷ்ட்ட னான நாலாமதிகாரிககு, கர்மஜ்ஞாநபகதிகளாகிற வுபாயவிஸேஷங களி லொன்றை யநுஷ்டிததா லதநதை பராயஶசிதத ஸ்தாநீய மாககி ஈஶவரன் ஸாவகர்மங்களையும் கழிககையாலே,கர்மம் பராயஶ சித்த விநாஶ்ய மென்கிறார். பரபதந நிஷ்ட்டனான வஞ்சாமதி காரிக்கு, ஆஶரயணவேளையிலே யநாதிகால க்ருதாபராதபீதனைப் அவற்றையடைய ஈஶவரன் பொறுககைக குறுபபாகப் பிராட்டியை புருஷகாரமாக முன்னிட்டாஶரயிக்கையாலே அவனுக்காக விவனு

டைய வபராதத்தை யெல்லா மவன்பொறுத் தங்கீகரித்து இவ னுடைய வகில கர்மங்களையும் தள்ளிப் பொகடுகையாலே புருஷகார விநாஶ்ய மென்கிறார்.

268. அவ:—இப்படி புருஷகார ஸாபேக்ஷமென்னில் உபா யத்தினுடைய நைரபேக்ஷ்ய ஹாநிவாராதோ வென்கிற ஶங்கையிலே யருளிச்செய்கிறார் மேல்.

மூ:—268 உபாயம், ஸ்வீகார காலத்தில் புருஷ ஸாபேக்ஷமுமாய் புருஷகார ஸாபேக்ஷ முமா யிருக்கும்; கார்யகாலத்தில் உபய நிர பேக்ஷமா யிருக்கும்.

வ்யா:—(உபாயம்) என்று துடங்கி. அதாவது - ஸஹாயாந்தர ஸம்ஸர்காஸஹமான ஸித்தோபாயம், ஶரணவரணரூப ஸ்வீகார காலத்தில், ஸ்வீகர்த்தாவான புருஷனையும், ஸ்வீகரிப்பிக்கும் புருஷகாரத்தையும் அபேக்ஷித்திருக்கும்; ஸ்வீக்ருதனான தான் இவனுக் கநிஷ்ட நிவ்ருத்திபூர்வ கேஷ்டப்ராப்தியைப் பண்ணுகை யாகிற கார்யகாலத்தில், புருஷனும் புருஷகாரமுமாகிற வுபயத்தையு மபேக்ஷியாதே தானேசெய்து தலைக்கட்டுமென்கை. கார்யகாலத்தில் ஸஹகாரி ஸாபேக்ஷத்வமுண்டாகிலிறே யுபாயத்தினுடைய நைர பேக்ஷ்யத்துக்கு ஹாநிவருவதென்று கருத்து.

269. அவ:—ஸ்வப்ரயோஜநபரரை, (ப்ரதிகூலர்)[263] என்று அவிஶேஷேண வருளிச்செய்தாரிறே; இநத ஸ்வப்ரயோஜநபரதை அநுகூலாக்ரேஸரரான ஆழ்வார்கள் பக்கலிலும் தோற்றியிருக்கை யாலே தந்நிபந்தநமான ப்ராதிகூல்ய மவர்கள்பக்கல் வாராதபடி பரிஹரிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, தத்விஷய ஶங்கையை யநுவதிக்கிறார்.

மூ:—269 ஸ்வப்ரயோஜநபர ரெல்லாரையும் ப்ரதிகூல ராக நினைக்கலாமோ வென்னில்?

வ்யா:—(ஸ்வப்ரயோஜநபர ரெல்லாரையும்) என்று துடங்கி. 475 "நமக்கே நலமாதலில்" என்றும், 600 "நாம் கண்டுகந்து கூத் தாட ஞாலத்தூடே நடவாயே" என்றும், 601 "கண்டு நானுன்னை யுகக்க" என்றும், இத்யாதி வசநங்களாலும், மடலெடுக்கை முத லான ப்ரவ்ருத்திகளாலும், ஆழ்வார்களுக்கு மிந்த ஸ்வப்ரயோஜந

பாத்வ முண்டாகத் தோறறுநின்றதிறே ; ஆனபின்பு, ஸ்வப்ர யோஜநபர ரெலலாரையும் பரதிகூலரென்று சொலலபபார்க்கில் ஆழ்வாாகளேயு மபபடி நினைக்கவேண்டி வாராதோ வென்று ஶங கைக் கபிபராயம்.

270. அவ —அதனைப பரிஹரிககிறுா.

மூ·—270 இங்கு, ஸ்வப்ரயோஜந மென்கிறது - ஆஶ்ரயதோஷ ஜந்யமானத்தை.

வ்யா·—(இஙகு) என்று துடஙகி. அதாவது - பரதிகூலர் வகை சொலலுகிற விடததில, ஸவபரயோஜநமென்கிறது - அநுபவகைங காயஙகளுக் காஶரயமான சேதநனுடைய அவிதயாதி தோஷத்தால் வநத ஸ்வபரயோஜநததை என்கை. இததை (ஆஶ்ரயதோஷஜநயம்) என்றெுதுக்குகையாலே, ஆழ்வாாகளுடைய ஸ்வபரயோஜநம் விஷயதோஷ ஜநயமென்று கருத்து. இது தன்னை (விஷயதோஷத தாலே வருமவை [272] என்கிற வாக்யததிலே வ்யகதமாக வருளிச செயகிறுரிறே.

271. அவ·—இவ்வர்ததததை நிகமிககிறுர்.

மூ:—271 ஆகையாலே தோஷமில்லே.

வயா.—(ஆகையாலே தோஷமிலலே) என்று. அதாவது - ப்ராதி கூலய ஹேதுவாகச சொல்லபபட்ட ஸ்வபரயோஜநம் ஆஶ்ரயதோஷ ஜநயமாய், ஆழவாாகள் பககல ஸ்வப்ரயோஜநம் விஷயதோஷ ஜநயமா யிருககையாலே, அநத பராதிகூலய மிவாகள்பக்கலிலும் வருமென்கிற தோஷமிலலே யென்கை.

அன்றிககே, ஸ்வபரயோஜநபரரை ஸாமாநயேந ப்ரதிகூல ரென்று சொலலுமளவில, அநுகூலரான ஆழ்வார்கள்பககலிலு மிநத ஸ்வபரயோஜநபரதை தோறறுகையாலே அவர்களேயும் பரதி கூலரென்று நினைககவேண்டி வருகையால, ஸ்வபரயோஜநபரரை பரதிகூலரென்கை தோஷமன்றோவென்று நினைத்துப் பண்ணுகிற ஶஙகையை யநுவதிககிறுா. (ஸ்வப்ரயோஜநபர ரெல்லாரையும் ப்ரதிகூலராக நினைக்கலாமோ வென்னில) [269] என்று. அததைப் பரிஹரிக்கிறுர். (இங்கு) [270] என்று துடங்கி. அர்த்தம் பூர்வவத். நிகமிக்கிறுா, (ஆகையாலே தோஷமில்லே) என்று. (ஆகையாலே) என் கிறதுக் கர்த்தம் பூர்வவத். (தோஷமில்லே) என்றது - ஸ்வபரயோஜந

பரரை பரதிகூலரென்று சொன்னதில் தோஷமில்லையென்கை என்று இங்ஙனே யோஜிக்கவுமாம.

272. அவ.—இப்படி ஆஸ்ரயதோஷ ஜநயமன்றிக்கே விஷய தோஷ ஜநயமானாலும் ஸ்வரூபவிருத்தமானது தயாஜ்யமன்றோ வென்ன வருளிச்செய்கிறார் மேல.

**மூ—272 விஷயதோஷத்தாலே வருமவை யெல்லாம் துஸ்த்யஜமாயிறே யிருப்பது.**

வ்யா:—(விஷய தோஷத்தாலே) என்று தொடங்கி. அதாவது - அநுபவ விஷயமான வனுடைய வயிரவுருக்காய் ஆணகளையும் பெண்ணுடை யுடுத்தும்படியான விக்ரஹ வைலக்ஷண்யமாகிற தோஷத்தாலே வருகிற ஸ்வபரயோஜநபரதை, தத்தேதுவான பரா வண்யம், தத்ஸித்யர்த்தமான வ்யாபாரங்களாகிற விவையெல்லாம ஸ்வரூப விருத்தமென்று விடப்பார்த்தாலும் விட வரிதாயிறே யிருப்பதென்கை. (விஷய தோஷத்தாலே வருமது) என்று பாட மானபோது, ஸ்வபரயோஜநமாத்ரத்தையே சொல்லுகிறது.

273. அவ.—விஷயதோஷத்தால் வருமதின் துஸ்த்யஜத்வத்தில் ப்ரமாணங் காட்டுகிறார் மேல.

**மூ—273 "ஊமையரோடு செவிடர் வார்த்தை" "கத மந்ய திச்சதி."**

வ்யா:—("ஊமையரோடு செவிடர் வார்த்தை," "கதமந்யதிச் சதி") என்று, 602 "மற்றிருந்தீர்கட்கு" என்று தொடங்கி, "அத்தலை யாலே பேறென் றறுதியிட்டா லவன் வருமளவும க்ரமப்ராப்தி பார்த்தா றியிருக்க வேணுங்காண், நீ இங்ஙன் பதறலாகாதுகாண்" என்ற தாய்மாரைக் குறித்து, "இவ்விஷயத்தில பராவண்ய மின் றிக்கே என்னுடைய நிலைக்கு வேறாயிருந்த வுங்களுக்கு எனக் கோடு கிற தசை யறியப்போகாது, அவனவன் என்று வாய்புலற்றும்படி ஸ்ரீய:பதி விஷயமான பராவண்யத்தை மறுபாடுருவ வுடையேனாய், இப்படி யவனை யொழியச் செல்லாமையுண்டானா லவனிருந்த விடத்தே சென்று கிட்டுகை ப்ராப்தமா யிருக்க, அதுக்குக் கால நடைதாராதபடி யிருக்கிற வெனக்கு, நானவனோடே சென்று சேராமைக் குறுப்பாக நீங்கள் சொல்லும் வார்த்தை யெல்லாம், கேட்கைக்குப் பரிகரமில்லாத செவிடரோடே சொல்லுகைக்குப

பரிகரமில்லாத ஊமைகள் வார்த்தை சொன்னபோலே யிருப்ப தொன்று" என்று ஆண்டா ளருளிச்செய்கையாலும் ; 60[3] "த்வாமருதஸ்யந்திநி" என்று தொடங்கி - "வருத்த ஶேஷியான தேவருடைய தேனே மலரும் திருவடித்தாமரைகளில் போக்யதை யிலே யழுந்தின நெஞ்சு மற்றொரு க்ஷுத்ர விஷயத்தை விரும்பும் படி யெங்ஙனே', மதுவே ஜீவநமான வண்டு மது பரிபூர்ணமான தாமரைப்பூவானது நில்லாநிற்கச்செய்தே, அதின் சுவடறிந்த தான் கிட்டுகை யரிதாய கிட்டினாலும் நாக்கு நனைக்கப்போராததா யிருக் கிற முள்ளிப்பூவிற் சென்று படியாதமாதாமன்றிக்கே அத்தைக் கடாக்ஷிப்பதும் செய்யாதிறே" என்று ஆளவந்தா ரருளிச்செய்கை யாலும் ; விக்ரஹ வைலக்ஷண்யங்கண்டு பகவத் விஷயத்தில் ப்ர வணரானவர்களை மீட்க வரிதென்று தோற்றுகையாலே, விஷய தோஷத்தால வரும் அது துஸ்த்யஜ மென்னுமிடம் ஸித்தமிறே.

274. அவ—ஆக, - நிசர்யோகத மங்களாஶாஸ நாநுகூல ஸஹவாஸ ப்ரதிகூல ஸஹவாஸ நிவ்ருத்திகளை விவரித்தார் கீழ் ; (ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன்) [243] என்றத்தை விவரிக்கிறார் மேல்.

**மூ—274 இப்படி யிவையித்தனையும் ஸதாசார்ய ப்ர ஸாதத்தாலே வர்த்திக்கும்போதைக்கு, வஸ் தவ்யம், ஆசார்ய ஸந்நிதியும் பகவத்ஸந் நிதியும் ; வக்தவ்யம், ஆசார்ய வைபவமும் ஸ்வநிகர்ஷமும் ; ஜப்தவ்யம், குருபரம்பரை யும் த்வயமும்; பரிக்ராஹ்யம், பூர்வாசார்யர்க ளுடைய வசநமும் அநுஷ்டாநமும் ; பரி த்யாஜ்யம், அவைஷ்ணவ ஸஹவாஸமும் அபிமாநமும் ; கர்த்தவ்யம், ஆசார்ய கைங் கர்யமும் பகவத் கைங்கர்யமும்.**

வ்யா—(இப்படி) என்று தொடங்கி. (இப்படி யிவை யித்தனை யும் ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்போதைக்கு) என் றது - கீழ்ச்சொன்ன ப்ரகாரத்திலே இந்த ஸ்வபாவ விஶேஷங்க ளெல்லாம் ஸதாசார்யனுடைய ப்ரஸாதத்தாலே கொழுந்துவிட்டு

* "நிசர்யோபாத்த" என்றும் பாடங்காண்கிறது.

வளர்ந்துவரும்போதைக் கென்றபடி. (வஸ்தவ்யம் ஆசார்ய ஸந்நிதியும் பகவத ஸந்நிதியும) அதாவது - இவனுக்கு வாஸஸ்தலம், ஹிதைஷியாய் உபதேஶாதிகளாலே யிவறறுக குத்பாதகனான ஸ்வாசார்யனுடைய ஸந்நிதியும, அவன் காட்டிக்கொடுக்கக கைக்கொண்டு அவனுகந்த விஷயமாய் தன்பக்கலிலே விஶேஷ கடாக்ஷாதிகளைப பண்ணிக்கொண்டுபோரும், அர்ச்சாவதாரமான பகவான் ஸந்நிதியுமென்கை. இது ஸமுச்சயமு மன்று ஸம விகல்பமுமன்று, ஆசார்ய ஸந்நிதியே ப்ரதாநம, ததலாபததில அர்ச்சாவதார ஸந்நிதி என்றபடி. ஆகவிறே ஆசார்ய ஸந்நிதியை முறபட வருளிச்செய்தது. 604 "மத்பக்தைஸ் ஸஹஸம வாஸஸ்தத வஸிதவ்யம யாபிவா" என்றிறே பகவ துக்தியும். இனி வகதவ்யம் துடங்கி மேலுடைய ஸமுச்சயம். (வகதவ்யம ஆசார்ய வைபவமும் ஸவநிகர்ஷமும்) அதாவது - இவனுக்கு ஸாவகாலமும வாக்கால சொல்லப்படுமது, துர்கதியே பற்றுசாகத தன்னை யங்கீகரிததருளின வாசார்யனுடைய தயா க்ஷாநத்யாதி வைபவமும, எததனையேனும தயாதி குணபரிபூர்ணரு மேறிட்டுப் பார்க்க வருவருகக்கும்படிநின்ற வநாதமகுண பூர்த்தியாகிற தன்னுடைய நிகாஷமுமாகிற விவையுமென்கை. ஸ்ரீமதுரகவியாழ்வார், 605 "நன்மையால" என்கிற பாட்டுத் துடங்கி இவை யிரண்டையும விஶதமாக வருளிச்செய்தாரிறே. (ஜப்தவ்யம குருபரம்பரையும த்வயமும்) அதாவது - இவனுக்கு காலக்ஷேபத்துக்கும போகத்துக்கு முறுப்பாக ரஹஸ்யமாக வநுஸந்தித்துக்கொண்டு போரப்படுமது, 606 "ராமாநுஜாங்க்ரி ஶரணோஸ்மி" இத்யாதிபபடியே ஸர்வேஶ்வரன் குளிரநோக்குகைக்குடலாய், 607 "ஸதாசார்ய வம்ஶோ ஜ்ஞேயஃ - ஆசார்யாணு மஸாவஸாவிதயா பகவததஃ" என்கிறபடியே - ஸ்வாசார்யாதி பரமாசார்ய பகவதபர்யந்தையான குருபரமபரையும், அந்த குருபரம்பரா ப்ராப்தமாய் ஸ்வாசார்யன் தனக்குத் தஞ்சமாக வுபதேஶித்த த்வயமுமென்கை. இததால - குருபரம்பரா பூர்வகமான த்வயமே யிவனுக்கு ரஹஸ்யமாக வநுஸந்தித்துக்கொண்டுபோரப்படும தென்றபடி. பாஷ்யகாரர்க்கு காலக்ஷேப ப்ரகார மருளிச்செய்கிறவிடத்தில், 608 "த்வய மாத்ராநுஸந்தாநேந ஸஹ ஸதைவம் வக்தா" என்றிறே பெரியபெருமா ளருளிச்செய்தது. (பரிக்ராஹ்யம் பூர்வாசார்யர்களுடைய வசநமும் அநுஷ்டாநமும்) அதாவது - தனக்கு ஜ்ஞாநாநுஷ்டானங்கள் ஊற்றிருக்கைக் குறுப்பாக்க கண்டகண்டவிடம்

களிலே யிவனால் பரிக்ரஹிக்கப்படுமது, நாதமுநிகள்முதலாக இவ்வருகுள்ள பூர்வாசார்யர்களுடைய ஜ்ஞாநவ்யாபாரத்தை பரகாஶகமான திவ்யவசநங்களும், அநந்தவசநாநுரூபமான மறுவற்ற அநுஷ்டாநங்களு மென்கை. 609 "ஸம்வ்யாஹ்ருதாநி மஹதாம ஸம்க்ருதாநி ததஸ்ததஃ - ஸஞ்சிநவந்தீர ஆவஹீத ஶிலஹாரீ ஶிலமயதா" என்னக்கடவதிறே. (பரித்யாஜ்யம் அவைஷ்ணவ ஸஹவாஸமும் அபிமாநமும்) அதாவது - ஜ்ஞாநாநுஷ்டாந நாஶகமென்னும் பயத்தாலே யிவனுக்கு ஸ்வாஸநமாக விடப்படுமது, வைஷ்ணவ லக்ஷணமில்லாதவர்களோட்டை ஸஹவாஸமும், அவர்கள் இவன் நம்முடையவன் என்றிரங்கவயங்களாலே தன்திறத்திலபண்ணு மபிமாநமு மென்கை.

(கர்த்தவ்யம் ஆசார்யகைங்கர்யமும் பகவத் கைங்கர்யமும்) அதாவது - இவனுக்கு ஸ்வரூபாநுகூலமாகவே யெப்போதும் செய்யப்படுமது, மஹோபகாரகனான ஸ்வாசார்யன விஷயத்தில ப்ரேமபூர்வகமாகப் பண்ணும் கைங்கர்யமும், தந்நியோக பரதந்த்ரனாய்ப்பண்ணும் பகவத் கைங்கர்யமுமெனகை. ஆக, திநசர்யை யிற்சொன்ன ஸ்வபாவ விஶேஷங்க ளெல்லாம் (ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே வாத்திக்குமபடி பண்ணிக்கொண்டு போருகையாவது)- இப்படி யிருந்துள்ள வஸ்துவை வக்தவ்ய ஜபதவ்ய பரிக்ராஹ்ய பரித்யாஜ்ய கர்த்தவ்யங்களை யறிந்து இவற்றிலே நிஷ்டனாய்ப் போருகை யென்றதாய்த்து.

275. அவ—இப்படி கர்த்தவ்யமான கைங்கர்யங்களிரண்டு மறிவ தெம்முகத்தாலே யென்னு மாகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறா மேல.

மூ —275 கீழ்ச்சொன்ன பகவத் கைங்கர்யமறிவது, ஶாஸ்த்ரமுகத்தாலே ; ஆசார்யகைங்கர்யமறிவது, ஶாஸ்த்ர முகத்தாலும் ஆசார்ய வசநத்தாலும்.

வ்யா.—(கீழ்ச்சொன்ன) என்று தொடங்கி. (கீழ்) என்றது - வஸ்துவ்யாதிகளைச்சொன்ன விடத்தனைநயிலென்றபடி. (பகவத் கைங்கர்யமறிவது ஶாஸ்த்ரமுகத்தாலே) என்றது - பகவா னிவனுக்கு இப்போது வாய்திறந்தொன்றை யருளிச்செய்யாமையாலே, தத்பரதிபாதகமான ஶ்ருதிஸ்ம்ருத்யாதி ஶாஸ்த்ரமுகத்தாலே யறியவேணு

மென்கை. (ஆசார்ய கைங்கர்யமறிவது ஶாஸ்த்ரமுகத்தாலு மாசார்ய வசநத்தாலும்) என்றது-ஆசார்ய விஷயத்தில் ஶுஶ்ரூஷா ப்ரகாரங்களை ப்ரதிபாதிக்கிற ஶாஸ்த்ரமுகத்தாலும், தனக்கு இஷ்டா நிஷ்டங்க ளின்னதென்னுமிடத்தை யவனருளிச்செய்த வசநத்தாலு மென்கை.

## மூ—276 கைங்கர்யந்தா னிரண்டு.

276. வ்யா—இனிமேல் கைங்கர்யவேஷந்தனை யறிவிக்கைக் காக, (கைங்கர்யந்தா னிரண்டு) என்கிறார்.

## மூ.—277 அதாவது - இஷ்டஞ் செய்கையும், அநிஷ்டந் தவிருகையும்.

277. வ்யா—அதாவதேதென்ன, (அதாவது இஷ்டஞ்செய்கை யும் அநிஷ்டம் தவிருகையும்) என்கிறார்.

278. அவ—இவைதானிரண்டு மெத்தை யவலம்பித்திருக்கு மென்ன வருளிச்செய்கிறார் மேல்.

## மூ.—278 இஷ்டாநிஷ்டங்கள் வர்ணாஶ்ரமங்களையும் ஆத்ம ஸ்வரூபத்தையு மவலம்பித்திருக்கும்.

வ்யா—(இஷ்டாநிஷ்டங்கள்) என்று தொடங்கி. அதாவது - கீழ்ச்சொன்ன கைங்கர்ய ப்ரதிஸம்பந்திக ளிருவருடையவு மிஷ்டா நிஷ்டங்கள், இவ்வதிகாரியுடைய வர்ணாஶ்ரமங்களையும் ஆத்மஸ்வ ரூபத்தையும்பற்றி யிருக்குமென்கை. (இஷ்டாநிஷ்டங்கள் வர் ணாஶ்ரமங்களைப் பற்றியிருக்கையாவது) - ஸ்வவர்ணாஶ்ரம மோசிதமான கர்மங்களை பரார்த்தபுத்யாவநுஷ்டிக்கை இஷ்டமாய், ஸ்வார்த்தபுத்யாவநுஷ்டிக்கை யநிஷ்டமாயிருக்கை. பரார்த்தபுத்யா வநுஷ்டிக்கையாவது - லோகஸங்க்ரஹத்யாவாகவும் ஶிஷ்யபுத்ரர் களுடைய வுஜ்ஜீவநார்த்தமாகவும் ஆநுஶம்ஸ்யத்தாலே யநுஷ் டிக்கை. இவ்வர்த்தத்தை "இனி இவற்றில் நம்மாசார்யர்க ளநுஷ் டிக்கிறவை ஶிஷ்யபுத்ரர்களுடைய வுஜ்ஜீவநார்த்தமாக ஆநுஶம் ஸ்யத்தாலே யநுஷ்டிக்கிறார்களித்தனை ; இப்படி யநுஷ்டியாதபோது பகவத்விபூதிபூதரான சேதநர்க்கு நாஶஹேதுவாகையாலே ஈஶ்வர னுக் கப்பிமதபூதனவன் ; ஆகையால், யாதோராளவாலே லோகஸங்க்ர ஹம் பிறக்கும், யாதோராளவாலே ஶிஷ்யபுத்ரர்களுக் குஜ்ஜீவநமுண் டாம், அவ்வளவு மநுஷ்டேயமென்றதாய்த்து ; ப்ரவ்ருத்தி தர்மங்

தானே அபிஸந்திபேதத்தாலே நிவ்ருத்தி தர்மமான வோபாதி, இந்த நிவ்ருத்தி தர்மமும் பாரப்யமாகக் கடவது, இவ்விடத்தில் அகாரணேபாரதந்தர்யம், எம்பெருமானுடைய வசப்ரமத்தவமும் தன்னுடைய புருஷார்த்தஹாநியுமாகக் கடவது" என்று தனிஸ்லோகத்திலே இவர்தாமே யருளிச்செய்தாரிறே.] இனி. ஸ்வார்த்த புத்யா வநுஷ்டிக்கையாவது - ஸ்வவர்ண ஸ்வாஸ்ரமோசிதமாக விஹிதமாகையாலே நமக்கிவையநுஷ்டியாதொழியில் க்ருத்யாகரணரூப பாபம் வருமென்று நினைத்தநுஷ்டிக்கை. (இஷ்டாநிஷ்டங்கள் ஆத்மஸ்வரூபத்தைப் பற்றியிருக்கையாவது) 610"இச்சைஸ்வரூபம்" என்கிறபடியே - விநியோக தசையில் ஸேஷியுடைய விசசாநுகுணமாக ஸ்வரூபத்தை விநியோகப்படுத்துகை யிஷ்டமாய், தட்டுமாறி விநியோகங்கொள்ளுமளவில் தன்னுடைய ஸேஷத்வத்தையிட்டிருய்த்தல் பாரதந்த்ரயத்தையிட் டெதிர்விழி கொடாதொழிதல் செய்கை யநிஷ்டமாயிருக்கை. அங்ஙனன்றிக்கே, (இஷ்டாநிஷ்டங்கள்) இத்யாதிக்கு - ஸ்வவர்ண ஸ்வாஸ்ரமோசிதங்களைச் செய்கை யிஷ்டம் தத்விருத்தங்களைச் செய்கை யநிஷ்டமென்றும், ஆத்மஸ்வரூபத்துக் குசிதமானவற்றைச் செய்கை யிஷ்டம் தத்விருத்தங்களைச் செய்கை யநிஷ்டமென்றும் யோஜிக்கவுமாம். அங்ஙனுமன்றிக்கே, ஔபாதிகமுமாய அநித்யமுமான வர்ணாஸ்ரமங்களிலே ஊற்றிருக்கை யநிஷ்டம் நிருபாதிக நித்யஸேஷமான வாத்மஸ்வரூபத்திலே ஊற்றிருக்கை யிஷ்டமென்றும் யோஜிக்கவுமாம். இங்ஙனூற்றத்தையிட்டுச்சொல்லுகை யன்றிக்கே, அநிஷ்டம் வர்ணாஸ்ரமத்தை யவலம்பித்திருக்கும் இஷ்டம் ஆத்மஸ்வரூபத்தை யவலம்பித்திருக்கும் என்றிங்ஙனே விபஜித்தது, வர்ணாஸ்ரமாசாரத்தை யநிஷ்டகோடியாகச் சொல்லப்பார்க்கில், 163 "ஸ்ருதி ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ்தா முல்லங்க்ய வர்த்ததே-ஆஜ்ஞாச்சேதீ மமத்ரோஹீ மத்பக்தோபி நவைஷ்ணவ:" என்றும், 611 "அவிப்லவாய தர்மாணாம் பாலநாய குலஸ்யச - ஸங்க்ரஹாயச லோகஸ்ய மர்யாதா ஸ்தாபநாயச - ப்ரியாய மமவிஷ்ணோஸ்ச தேவதேவஸ்ய ஸார்ங்கிண: - மநீஷீவைதிகாசாரம் மநஸாபி நலங்கயேத - யதாஹி வல்லபோ ராஜ்ஞோ நதீம் ராஜ்ஞா ப்ரவர்த்திதாம-லோகோபயோகிநீம் ரம்யாம் பஹுஸஸ்யவிவர்த்திநீம் - லங்கயந் ஸூலமாரோஹேத் நபேக்ஷாபிதாமபதி - ஏவம் விலங்கயந் மர்த்யோ மர்யாதாம் வேதநிர்மிதாம்-ப்ரியோபி நப்ரியோஸௌமே மதாஜ்ஞா வ்யதிவர்த்தநாத் - உபாயத்வ க்ரஹம்

தத்ர வர்ஜயேந் மநஸா ஸுதீ:” என்றும் ஸர்வேஶ்வரனும் பிராட்டியு மருளிச்செய்த வசநங்களோடும் பூர்வாசார்யர்களுடைய வசநா நுஷ்டாநங்களோடும் விரோதிக்குமிறே; ஆனபின்பு, கீழ்ச்சொன்ன படியே இவ்வாக்யத்துக்குப் பொருளாகக்கடவது.

279. அவ—இம்மூன்று யோஜனைக்கும் மேலில் வாக்யத்தோடு ஸங்கதி யென்னென்னில்; ப்ரதமயோஜனையில், இப்படி வர்ணாஶ்ரமாநுஷ்டாநத்தில் ப்ரதிபத்தி விஶேஷங்களிலும் ஆத்மஸ்வரூபத்தினுடைய விநியோக தஶையிலானுகூல்ய ப்ராதிகூல்யங்களிலுமாக இஷ்டாநிஷ்டங்களுக்கு விஷய விபாகம் பண்ணவேணுமோ, வர்ணாஶ்ரமாநுரூபமாயும் ஸ்வரூபாநுரூபமாயு முள்ளவற்றைச் செய்கை யிஷ்டம், தத்விருத்தங்களான வற்றைச் செய்கை யநிஷ்டமென்றாலோவென்ன வருளிச்செய்கிறார் மேல். (புண்யத்துக்கு) என்று துடங்கி. த்விதீயயோஜனையில், இப்படி வர்ணாஶ்ரம விருத்தங்களையும் ஸ்வரூபவிருத்தங்களையுஞ் செய்கை யநிஷ்டமென் றிவனுக்குச் சொல்லித் தவிர்ப்பிக்கைதான் வேணுமோ, (புண்யத்துக்கஞ்சுகிறவன்) என்று துடங்கி யருளிச்செய்கிறார். த்ருதீய யோஜனையில், இப்படி வர்ணாஶ்ரமங்களி லூற்றமற்றதால் அக்ருத்யகரணம் வந்து புகுராதோவென்ன, (புண்யத்துக்கஞ்சுகிறவன்) இத்யாதியாலே யருளிச்செய்கிறார்.

**மூ—279 புண்யத்துக்கஞ்சுகிறவன் பாபத்தைப்பண்ணுனிறே.**

வ்யா—(புண்யத்துக்கஞ்சுகிறவன் பாபத்தைப் பண்ணுனிறே) என்றது - பகவந்நிக்ரஹஹேதுவாக ஶாஸ்த்ரஸித்தமா யிருக்கச் செய்தேயும் மோக்ஷவிரோதி யென்னுமதாலே புண்யம் செய்கைக் குட்பட வஞ்சுகிற விவ்வதிகாரி, பகவந்நிக்ரஹஹேதுவாக ஶாஸ்த்ரஸித்தமாய் நரகாவஹமென்று ஸாமாந்யருமுட்படச் செய்யாத பாபத்தை யொருக்காலும் செய்யானிறே என்கை.

280. அவ:—இவன் புண்யத்துக் கஞ்சும்படியையும், வத்ஸலனை ஸர்வேஶ்வரனுக்கு மிட்டமற்றும்படி பாபப்ரவ்ருத்தியி லந்வயமற்றிருக்கும்படியையும் தர்ஶிப்பிக்கிறார் மேல்.

**மூ—280 இவன், புண்யத்தை பாபமென்றிருக்கும்; அவன், பாபத்தை புண்யமென்றிருக்கும்;**

**அவனுக் கது கிடையாது ; இவனது செய்யான்.**

வ்யா:—(இவன் புண்யத்தை) இத்யாதி வாக்யத்ரயத்தாலே. அதாவது - 612 "ததா வித்வாந புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" என்கையாலே புண்யபாபங்களிரண்டும் மோக்ஷ விரோதி என்றிருக்கு மிவ்வதிகாரி, நாட்டார் ஸுகஹேதுவென்று விரும்பியிருக்கும் புண்யத்தை பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகதயா வநிஷ்டாவஹமாகையாலே, துக்கஹேதுவான பாபமென்று நினைத்து வெருவியிருக்கும் ; ஆஸ்ரிதர் செய்த குற்றம் நற்றமாகவே கொள்ளு மதிமாத்ரவத்ஸலனான வீஸ்வரன், இவ்வதிகாரி யேதேனுமொரு பாபத்தைப் பண்ணிலும் அத்தைக்குற்றமாக நினையாதே நற்றமாக நினைத்துகந்திருக்கும் ; அவனப்படி யிருந்தானேயாகிலும், இவ்வதிகாரி பாபப்ரவ்ருத்தியி லநவயமற்று நியதனாய் வர்த்திக்கையாலே, பாபத்தை புண்யமாகக்கொள்ளும் வத்ஸலனானவனுக்கு, அதாசைப் பட்டுப்போமித்தனையொழிய கிடையாதென்கை. ஆக, கீழ் கர்த்தவ்யமாகச்சொன்ன கைங்கர்யமறிவது இன்னத்தாலே என்றும், கைங்கர்யந்தான் த்விவிதமென்றும், அதுதானின்னதென்றும் தத்பயமுமின்னத்தை யவலம்பித்திருக்குமென்றுஞ் சொல்லி, அதில் ப்ராஸங்கிக ஸங்காபரிஹாரமும் பண்ணப்பட்டது.

281. அவ—தாத்ருஸ கைங்கர்ய மிவனுக் கேதேனுமொரு வழியாலேயாகிலு முண்டாகவேணுமென்னு மிதினுடைய வவஸ்யகர்ணீயத்வத்தை யருளிச்செய்கிறார் மேல்.

**மூ—281 கைங்கர்யந்தான் பக்திமூல மல்லாதபோது ப்ரீதிமூலமாய் வரவேணும்.**

வ்யா:—(கைங்கர்யந்தான்) என்று துடங்கி. (பக்திமூலமாய் வருகையாவது) - ஸேஷியுடைய முகமலர்த்திக் குறுப்பானவையே செய்துகொண்டு நிற்கவேண்டும்படியான தத்விஷய ப்ரேமமடியாக வருகை.

(அல்லாதபோது ப்ரீதிமூலமாய வருகையாவது) - அதின்றிக்கே யொழிந்தால், 613 "அகிஞ்சித்கரஸ்ய ஸேஷத்வாநுபபத்தி:" என்கிறபடியே - ஸேஷவ்ருத்தியில்லாதபோது ஸேஷத்வஹாநி பிறக்குமென்னும் ப்ரீதியடியாக வருகை. இதில் பக்தி மூலமானதுவே முக்யம், தத்அலாபத்தில் ப்ரீதிமூலந்தானாகிலும் வேணுமென்றபடி.

282. அவ — அது தானு மில்லாவிடில செய்வதென்னென்ன வருளிச்செய்கிறார்.

மூ — 282 அதுவுமில்லாதபோது, அதிகாரத்திலும் உபாயோபேயங்களிலு மந்வயமின்றிக்கே யொழியும்.

வயா — (அதுவுமில்லாதபோது) என்று துடங்கி. அதாவது - அமுக்யமான பீதிமூல கைஙகர்யந்தானு மிலலாதபோது, கிஞ்சித்காராபாவத்தாலே ஶேஷத்வரூபமான வதிகாரததிலும், அதிகாரிஸாபேக்ஷமாயிருநதுள்ள ஶேஷியுடைய க்ருபாரூபமான வுபாயத்திலும், இவனுடைய வநுகூலவ்ருத்தி ஸாபேக்ஷமான வவனுடைய முகமலர்த்தியாகிற வுபேயத்திலு மநவய மற்றுவிடு மென்கை.

283. அவ — ஆக, கீழிரண்டு வாகயததாலும் - கைங்காயாவஶ்ய கர்ததவயதவமும், கைஙகர்யாபாவததில்வரு மநர்த்த விஶேஷங்களுங் காட்டப்பட்டது ; ஏவமவித கைங்கர்யத்தில ஸாதநபுததியைத் தவிர்ககிறார மேல்.

மூ — 283 கைங்கர்யந்தன்னை பலஸாதநமாக்காதே பலமாக்கவேணும்.

வ்யா — (கைஙகர்யநதன்னை) என்று துடங்கி. அதாவது - இப்படி யவஶ்ய கரணீயமாகக, கீழ்ச்சொன்ன கைங்கர்யநதன்னைப் பண்ணுமளவில், தருஷ்டா தருஷ்டபலங்களி லேதேமொன்றுககு ஸாதநமாக பரதிபத்திபண்ணுதே, ஸ்வயம பரயோஜநமாக ப்ரதிபத்தி பண்ணவேணுமென்கை.

284. அவ: — இத்தை விஶதீகரிககிறார் மேல்.

மூ: — 284 அதாவது - தான் கையேலாதே அவனைக் கையேற்கப் பண்ணுகை.

வ்யா: — (அதாவது) என்று துடங்கி. (அதாவது) என்றது - இததை ஸாதநமாக்காதே பலமாக்குகையாவ தென்றபடி. (தான் கையேலாதே அவனைக் கையேற்கப்பண்ணுகையாவது) - கைங்கர்யம் பண்ணுகிறதான் அதுக்கு பலமாக வவன்பக்கலிலே யொன்றை யர்த்தியாதே ஸ்வயம் ப்ரயோஜநமாகச செய்யாநின்றுகொண்டு கைங்கர்யங் கொள்ளுகிறவவனை 614 "தாஸ்ஸர்வாஶ ப்ரிஸாதேவ:

பாதிகருஹறுதிவை ஸ்வயம்" என்கிறபடியே தன்பூர்த்தி பாராதே ஸாபேக்ஷனுய விரும்பிக கொள்ளுமபடி பணணுகை.

285. அவ:—இவவளவும போராது, தான்கொடுததத்தை அவன் கொணடதுககு பரதயுபகாரம் பண்ணவும் வேணுமெனகிறா மேல.

## மூ—285 கொடுத்துக் கொள்ளாதே கொண்டதுக்குக் கைக்கூலி கொடுக்கவேணும்.

வ்யா.—(கொடுதது) என்று துடஙகி. அதாவது - 615 "தேஹி மே ததாமிதே" என்கிறபடியே-தானவனுக கொன்றை ஸமாபபிதது அவன பககலிலேயொரு பரயோஜநம் கொள்ளாதே, 616 "இன்று வநதித்தனையு மமுது செய்திடபபெறில - நானொன்று நூறுயிர மாகக கொடுததுப பின்னு மாளுஞ்செயவன்" என்ற பெரியாழ்வார் திருமகளைபபோலே, தான ஸமாபபித்த த்ரவ்யததை யவனஙகீகரிதத வுபகாரததுககாக, அபபடி யிருநதுள்ளவற்றைத் தன்னபிநிவேஶாநுகுணமாக நிறையககொண்டுவநது ஸமாபபியாநின்று கொண்டு பின்னையு மடிமைசெயகையாகிற கைககூலி கொடுகக வேணுமென்கை.

286. அவ.—இபபடி யநயபரயோஜநனுய கிஞசித்கரித்தாலாய்த்து ஸ்வரூப முஜஜவலமாவ தென்னுமததை ஸத்ருஷ்டாநதமாக வருளிச செயகிறா மேல்.

## மூ—286 ஸ்ரீவிதுரரையும் ஸ்ரீமாலாகாரரையும் கூனியையும் போலே கிஞ்சித்கரித்தால் ஸ்வரூபம் நிறம்பெறுவது.

வயா.—(ஸ்ரீ விதுரரையும) என்று துடஙகி.

287. அவ.—தருஷ்டாநதபூதரான வவாகள் கிஞசித்கரிதத பரகாரநதன்னை யருளிசசெயகிறா.

## மூ—287 மடிதடவாத சோறும், சுருள்நாறுத பூவும், சுண்ணும்புபடாத சாந்துமிறே யிவர்கள் கொடுத்தது.

வயா:—(மடிதடவாத) என்று துடங்கி. (மடிதடவாத சோறுவது) - முநதற வாதாத்தோடே யிட்டு பின்னை இதுக்குக் காசுதராகாதோ என்று மடிசசீலை சோதிக்கைக்காக 'மடியைப்' பிடிதனுத்

தடவி உண்டவன்னென்று சுளையும்படி பண்ணும ப்ரயோஜநாந்தர பரிதுரு சோறுபோலன்றிக்கே, உண்டவனென்று சுகிக்கும்படி அநந்யப்ரயோஜநமான சோறு, இப்படியிருந்துள்ள சோறிறே, 523 "புக்தவந்தஸ்து தவிஜாக்ரேஷு நிஷண்ணா: பரமாஸநே - விதுராந்நாநி புபுஜே ஶுசீநி குணவந்தி ச" என்று பாவநத்வ போக்யத்வ பரஸ்தமாம்படி ஸ்ரீவிதுரரவனுக்கு ஸமர்ப்பித்தது. (சுருள்நாறுத பூவாவது) - அகநி ஸ்பர்ஶமுண்டானால சுருள் நாறும்படியிறே பூவின் ஸ்வபாவமிருப்பது, அப்படியே, ப்ரயோஜநாந்தர ஸ்பர்ஶமாகிற சுருள்நாற்றமில்லாதபடி அநந்யப்ரயோஜநத்வ பரிமளயுக்தமாகவிடும் புஷ்பம்; இப்படியிருந்துள்ள பூவிறே, 617 "ப்ரஸாதபரமௌ நாதௌ மமகேஹமுபாகதௌ - தந்யோஹ மர்ச்சயிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவந:" என்று விஶேஷஜ்ஞராலாகிக்கும்படி அத்யாதரபூர்வகமாக ஸ்ரீமாலாகாரரவனுக்குக் கொடுத்தது.

(சுண்ணம்புபடாத சாந்தாவது) - ஆயிரம்பொன்னைப்பூரியக் கூட்டியும் சுண்ணம்பு திவலைபடக் கெடும்படியிறே சாந்தின் ஸ்வபாவம்; அப்படியே ப்ரயோஜநாந்தர ஸ்பர்ஶமாகிற தோஷமின்றிக்கே அநந்ய ப்ரயோஜநமான சாந்து; இப்படியிருந்துள்ள சாந்திறே, 618 "ஸுகந்த மேதத் ராஜார்ஹம் ருசிரம் ருசிராநநே - ஆவயோர் காத்ர ஸத்ருஶம் தீயதா மநுலேபநம்" என்று அவனர்த்தித்த வநந்தரம் பூசுஞ்சாந்தாம்படி கூனி கொடுத்தது. ஆக, இப்படி யநந்யப்ரயோஜநமாக கிஞ்சித்கரித்ததாலாயத்து கைங்கர்யாஶ்ரயமான ஸ்வரூப முஜ்ஜ்வலமாவதென்கை.

ஆக, இவ்வளவும் - வஸ்த்வயாதி கரணையில் சரமோக்தமான கர்த்தவ்யரூப கைங்கர்யத்தை ஶோதித்து தாத்ருஶ கைங்கர்யத்தாலே ஸ்வரூபமுஜ்ஜ்வலமாமென்னுமிடத்தையு மருளிச்செய்தாராய்த்து.

288. அவ:—இப்படி யநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு கைங்கர்யஞ்செய்தாலே ஸ்வரூபமுஜ்ஜ்வலமாவதென்றுசொன்னவிதிலே முக்தாவஸ்தையில கைங்கர்ய தஶையில ஸ்வரூபௌஜ்ஜ்வல்யமும் ஆத்ததுக்கமென்று நினைத்து, இப்படி கைங்கர்யதஶையில ஸ்வரூபத்தை யுஜ்ஜ்வலமாக்குமோபாதி ஏதத்பூர்வ தஶாவிஶேஷங்களிலும் ஸ்வரூபத்தை யுஜ்ஜ்வலமாக்கவேணுமென்றருளிச்செய்கிறார் மேல்.

**மூ—288 கைங்கர்ய தசைபோலே முன்புள்ள தசை களிலும் ஸ்வரூபத்தை யுஜ்ஜ்வலமாக்க வேணும்.**

வ்யா:—(கைங்கர்ய தசைபோலே) என்று தொடங்கி. (முன்புள்ள தசைகளிலும்) என்றது - கைங்கர்யத்துக்கு பூர்வதசைகளிலு மென்றபடி.

289. அவ—முன்பே யெத்தனை தசை யுண்டென்னு மாகாங் க்ஷையிலே யருளிச்செய்கிறார்.

**மூ:—289 முன்பே நாலுதசை யுண்டு.**

வ்யா—(முன்பே நாலுதசையுண்டு) என்று.

290. அவ—அந்த நாலுதசையுந்தா னேதென்னு மபேக்ஷையிலே யருளிச்செய்கிறார்.

**மூ—290 அதாவது - ஜ்ஞாநதசையும், வரணதசை யும், ப்ராப்திதசையும், ப்ராப்யாநுபவதசை யும்.**

வ்யா—(அதாவது) என்று தொடங்கி. (ஜ்ஞாநதசையாவது) - ஆசார்யோபதேசத்தாலே தனக்கு ஜ்ஞாநம் பிறந்து செல்லுகிற தசை. (வரணதசையாவது) - ஸித்தோபாயபூதனை ஸர்வேச்வரனைத் தனக்குபாயமாக வரிக்கிற தசை (ப்ராப்திதசையாவது) - ஸாமஸாரிகஸகலதுரிதநிவ்ருத்திபூர்வகமாக வவன் திருவடிகளை ப்ராபிக்கிற தசை. (ப்ராப்யாநுபவ தசையாவது) - ப்ராப்யபூதனை வவனைக்கிட்டி யநுபவிக்கிற தசை. இவ்வநுபவஜநித ப்ரீதிகாரித கைங்கர்யமிறே பரமபுருஷார்த்தம். ப்ரதமாபேக்ஷிதமான தத்வ ஜ்ஞாநமும், ஜ்ஞாநபலமான வுபாயவரணமும், வரணபலமான ப்ராப்தியும், ப்ராப்திபலமான வநுபவமும், அநுபவஜநித ப்ரீதி காரித கைங்கர்யமுமாயிறே க்ரமமிருப்பது, ஆகையாலே, கைங்கர்ய தசை சரமதசையாய பூர்வ தசைகள் நாலு மிதிலே வந்தேறுகைக் கிட்டபடி யொழுங்காயிருக்கும்.

291. அவ—இவ்வோ தசைகளில் ஸ்வரூபத்தை யுஜ்ஜ்வல மாக்கும்படியை தர்சிப்பிக்கிறார் மேல.

**மூ—291 ஜ்ஞாநதசையில் அஜ்ஞாநத்தை முன்னிடும்; வரணதசையில் அபூர்த்தியை முன்னிடும்;**

ப்ராப்தி தசையில் ஆர்த்தியை முன்னிடும்; ப்ராப்யாநுபவ தசையில் அபிநிவேசத்தை முன்னிடும்.

வ்யா.—(ஜ்ஞாந தசையில) என்று துடங்கி. (ஜ்ஞாந தசையில் அஜ்ஞாநத்தை முன்னிடுகையாவது) - ஆசாரியன மேன்மேல தனக் கஜ்ஞாத ஜ்ஞாபநமபண்ணுமபடி தத்வஹித புருஷார்த்தங களில தன்னுடைய வஜ்ஞாநத்தைப பலகாலுமம விஜ்ஞாபிக்கை. (வரண தசையில அபூர்த்தியை முன்னிடுகையாவது) - 619 "நோற்ற நோன்பிலேன்" 620 "நதர்ம நிஷ்டோஸமி" 621 "ஸதகாமனைவகில கிஞ்சநஸஞ்சிநோமி" இத்யாதியிறபடியே - பேறறுககு ஹேதுவாகக கொள்ளலாவதொரு ஸுகருதாதிகளொன்றும தனக்கில்லாமை யாகிற வாகிஞ்சந்யததை ப்ரகாசிக்கை. (ப்ராப்தி தசையிலார்த்தியை முன்னிடுகையாவது) - பெறறபோது பெறுகிறோம் என்றிராதே, 622 "வானுலகந் தெளிந்தே யென்றெய்துவது" 272 "தரியேனினி" 623 "கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ" இத்யாதிப் படியே - விளம்பாஸஹத்வ நிப்நநமான தன்னுடைய கலேசாதிசயத்தை ப்ரகாசிப்பிக்கை. (ப்ராப்யாநுபவ தசையிலபிநிவேசத்தை முன்னிடுகையாவது) - பெருவிடாயனுக்குக குடிதத தண்ணீர் ராராதாபபோலே அநுபூதாம்சத்தால தருப்தி பிறவாதே மேன்மேலும தனககு விளைந்து செல்லுகிற வநுபவாபிநிவேசத்தைப் ப்ரகாசிப்பிக்கை. ஆக, ஜ்ஞாந தசை முதலான நாலுதசையிலும் (ஸ்வரூபத்தை யுஜ்ஜவலமாக்குகையாவது) [288] இவ்வோவாகாரங்களை முன்னிடுகையென்று கருத்து.

292. அவ.—இப்படி இவனிவற்றை முன்னிட்டா லிவனுக்கிவை ஸமிபப தெதாலேயென்ன வருளிச்செய்கிறார் மேல்.

மூ:—292 அஜ்ஞாநம் போவது ஆசார்ய ஜ்ஞாநத்தாலே; அபூர்த்தி போவது ஈச்வர பூர்த்தியாலே; ஆர்த்திபோவது அருளாலே; அபிநிவேசம் போவது அநுபவத்தாலே.

வ்யா.—(அஜ்ஞாநம் போவது) என்று துடங்கி. அதாவது - தத்வஹிதாதிகளி லிவனுக்குள்ள வஜ்ஞாநம் ஸவாஸநமாக நிவ்ருத்தமாவது, அவற்றை யலகலகாக ப்ரகாசிப்பித்து அஜ்ஞாத ஜ்ஞாபநம் பண்ணுகைக்கீடான வாசார்யனுடைய ஜ்ஞாநத்தாலே; பேற்

றுக்கு ஹேதுவாயிருந்துள்ள ஸத்கர்மாதிகளொன்றும் தனக்கில்லாமையாகிற வபூர்த்தி ஸம்பந்து, இத்தலையிலுள்ள தொன்றையு மபேக்ஷியாமல் கார்யஞ்செய்யு முபாய பூதனான வீச்வரனுடைய ஸஹகாரி நைரபேக்ஷ்யமாகிற பூர்த்தியாலே; அவிளம்பேந திருவடிகளை ப்ராபிக்கப் பெறுமையாலுண்டான வார்த்தி தீருவது, ஆர்த்திகண்டா லாற்றமாட்டாதே அப்போதே காரியஞ்செய்து தலைக் கட்டுகைக்குறுப்பான பரதுஃகாஸஹிஷ்ணுத்வமாகிற வவனுடைய கருணையாலே; அநுபவதசையி லநுக்ஷணம் பிறக்கு மபிநிவேச மடங்குவது, அவ்விஷயத்தை மேன்மேலு மநுபவிக்கையாலே யென்கை.

293. அவ—இவ்வஜ்ஞாநாதி சதுஷ்டயத்துக்கும் ஹேது வேதென்னு மாகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறார்.

## மூ—293 அஜ்ஞாநத்துக்கடி அபராதம்; அபூர்த்திக்கடி ஜ்ஞாநபூர்த்தி; ஆர்த்திக்கடி அலாபம்; அபிநிவேசத்துக்கடி அழகு.

வ்யா—(அஜ்ஞாநத்துக்கு) என்று தொடங்கி. அதாவது-ஜ்ஞாந தசையில் முன்னிடுகிற வஜ்ஞாநத்துக்கு மூலம், அநாதிகாலக்ருத அக்ருத்யகரண க்ருத்யாகரணாதி ரூபமான வபராதம்; வரணதசையில் முன்னிடுகிற வபூர்த்திக்கு நிதாநம், பேற்றுக்கு ஹேதுவாக நினைக்க லாவதொன்றும் தனக்கில்லாமையை தர்சிப்பிக்கைக் குடலான ஜ்ஞாநபூர்த்தி; ப்ராப்தி தசையில் முன்னிடுகிறவார்த்திக்கு ஹேது, ப்ராப்ய வஸ்துவை ஸ்வீகாரமாகக் கிட்டப்பெறுமையாகிற வலாபம; ப்ராப்யாநுபவ தசையில் முன்னிடுகிற வபிநிவேசத்துக்குக் காரணம், அநுபவித்தவளவால த்ருப்தி பிறவாதே மேன் மேலு மாசைப்படப்பண்ணு மவன் வடிவழகென்கை.

294. அவ:—ஆர்த்யபிநிவேச வேஷ மிருக்கும்படி யென்னென்ன வருளிச்செய்கிறார்.

## மூ:—294 ஆர்த்தியும் அபிநிவேசமு மிருக்கும்படி அர்ச்சிராதிகதியிலே சொன்னோம்.

வ்யா.—(ஆர்த்தியுமபி நிவேசமுமிருக்கும்படி அர்சிராதிகதியிலே சொன்னோம்) என்று 624 ["இநநின்ற நீர்மையினியா முறாமை" என்று தொடங்கி 625 "திருவாணைநின்னாணை கண்டாய்" என்று தடுத்

தும் வளர்க்கும் பெறவேண்டும்படி பரமபக்தி தலையெடுத்தல் * ] என்னுமளவாக - ஆர்த்தியிருக்கும்படியையும், 626 ["செய்ய வுடையும் திருமுகமும் செங்கனிவாயும் குழலுங்கண்டு" என்கிறபடியே முன்புதத்தையழகை யநுபவித்து என்று தொடங்கி, தன்னைப் பெற்ற பரீதியால் வந்த செவ்வியை யநுபவித்தது † ] என்னுமளவாக - அபிநிவேசமிருக்கும்படியையும், அந்த பாபந்தத்திலே ஸுஸ்பஷ்டமாக வருளிச்செய்தாரிறே.

ஆக, கைங்கர்ய தசைக்குமுன்னே நாலு தசையுண்டென்றும், அவை தானின்னதென்றும், அவ்வவ தசாநுகுணமான வஜ்ஞாநாதிகளை முன்னிட்டே அவ்வவ தசைகளில் ஸ்வரூப முஜ்ஜ்வலமாமென்றும், அவ்வஜ்ஞாநாதிகளைப் போக்குமவை ஆசார்யஜ்ஞாநாதிகளென்றும், அவ்வஜ்ஞாநாதிகளுக்கு நிதாநங்களுஞ் சொல்லிற்றாய்த்து.

295. அவ.—இந்த தசாசதுஷ்டய ப்ரஸங்கத்திலே, இவனுடைய குணசதுஷ்டயத்தையு மருளிச்செய்கிறார் மேல்.

**மூ—295 இவன்றனக்கு நாலுதசைபோலே நாலு குணமுண்டு.**

வ்யா.—(இவன் றனக்கு) என்று தொடங்கி. அதாவது - இவ்வதிகாரிக்கு ஸ்வரூபௌஜ்ஜ்வல்யத்துக்கு குடலாகக் கீழ்ச்சொன்ன தசாசதுஷ்டயம்போலே ஸ்வரூபௌஜ்ஜ்வல்ய ஹேதுவான குண சதுஷ்டயமு முண்டென்கை.

296 அவ.—அவைதானவை யென்னு மாகாங்க்ஷயிலே.

**மூ—296 அதாவது - ஜ்ஞாநமும், அஜ்ஞாநமும், சக்தியும், அசக்தியும்.**

வ்யா.—(அதாவது ஜ்ஞாநமு மஜ்ஞாநமும் சக்தியு மசக்தியும்) என்று அந்த குணங்கள் தன்னை யருளிச்செய்கிறார்.

297. அவ.—இவனுடைய குணசதுஷ்டயஞ் சொன்ன ப்ரஸங்கத்திலே, ஈச்வரனுக்கு மிவையுண்டென்னுமிடத்தை யருளிச்செய்கிறார்.

**மூ:—297 இந்நா லவனுக்குமுண்டு.**

வ்யா:—(இந்நா லவனுக்குமுண்டு) என்று. (அவன்) என்று - கீழ்ச்சொல்லிக்கொண்டு வந்த ஈச்வரனை பராமர்சிக்கிறது.

* முதல் ப்ரகரணம். † நாலாவது ப்ரகரணம்.

298. அவ·—இப்படி இருந்துள்ள இருவருடைய குணங்களுக்கு விஷயங்களவையென்று அவற்றை விபஜித்தருளிச்செய்கிறார்.

மூ—298 **அவனுடைய ஜ்ஞாநத்துக்கிலக்கு இவனுடைய குணம்; அஜ்ஞாநத்துக்கிலக்கு இவனுடைய தோஷம்; ஶக்திக்கிலக்கு இவனுடைய ரக்ஷணம்; அஶக்திக்கிலக்கு பரித்யாகம்.**

வயா:—(அவனுடைய) என்று தொடங்கி. கீழெடுத்தவிடையிலன்றிக்கே ஈஶ்வர குணவிஷயங்களை முந்துறவருளிச் செய்தது, சேதநகுண விஷயங்கள் சொல்லி முடித்தால் அதின்மேலே ப்ராஸங்கிகமாக நிஷித்த சாதுர்வித்யத்தை விஸ்தரேண வருளிச்செய்கைக்காக. (அவனுடைய ஜ்ஞாநத்துக்கிலக்கு இவனுடைய குணம்) என்றது-627"யஸ்ஸர்வஜ்ஞ:" என்றும் 628"ஸஹஸ்ராம்ஶு:" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வஜ்ஞனான வவனுடைய திவ்யஜ்ஞாநத்துக்கு விஷயம், அத்வேஷாபிமுக்யந் தொடங்கி யிச்சேதநன்பக்க லுண்டான ஆத்மகுண மென்கை. (அஜ்ஞாநத்துக்கிலக்கு இவனுடைய தோஷம்) என்றது - 628 "அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்ஶு:" என்றும், 629 "அவிஜ்ஞாதா ஹி பக்தாநாமாகஸ்ஸு கமலேக்ஷண:-ஸதா ஜகத்ஸமஸ்தஞ்ச பஶ்யந்நபி ஹ்ருதிஸ்தித:" என்றும் சொல்லுகிறபடியே-ஸர்வஜ்ஞனு யிருக்கச்செய்தே அவிஜ்ஞாதாவாயிருக்கு மவனுடைய வஜ்ஞாநத்துக்கு விஷயம், ப்ரக்ருதிவஶ்யனான விவன் பண்ணும் க்ருத்யகரணாதி தோஷமென்கை. (ஶக்திக்கிலக்கு இவனுடைய ரக்ஷணம்) என்றது - 630"பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே" என்கிறபடியே ஸர்வஶக்தியான வவனுடைய அகடிதகடநா ஸாமர்த்யமாகிற ஶக்திக்கு விஷயம், இவனுடைய ஸகலாநிஷ்டங்களையும் போக்கி ஸ்வரூபாநுகுணமான ஸகலேஷ்டங்களையும் கொடுக்கையாகிற ரக்ஷணமென்கை. (அஶக்திக்கிலக்கு பரித்யாகம்) என்றது - அப்படி ஸர்வஶக்தியான வவனுடைய வஶக்திக்கு விஷயம், துஸ்ஸஹமாக விவன்செய்யும் தோஷங்களாலே சீறிக் கைவிடுகை யென்கை.

299. அவ·—இப்படி ஈஶ்வர குண விஷயங்களை யருளிச்செய்து மேல சேதநகுண விஷயங்களை யருளிச்செய்கிறார்.

மூ:—299 **இவனுடைய ஜ்ஞாநத்துக்கிலக்கு ஆசார்ய குணம்; அஜ்ஞாநத்துக்கிலக்கு ஆசார்ய**

தோஷம்; ஶக்திக்கிலக்கு ஆசார்யகைங்கர்யம் ; அஶக்திக்கிலக்கு நிஷித்தாநுஷ்டாநம்.

வ்யா:—(இவனுடைய) என்று தொடங்கி. (இவனுடைய ஜ்ஞாநத்துக்கிலக்கு ஆசார்ய குணம்) என்றது - இச்சேதநனுடைய ஜ்ஞாநத்துக்கு விஷயம், மஹோபகாரகனான ஸ்வாசார்யனுடைய ஸத்குண ஸமூஹமென்கை. (அஜ்ஞாநத்துக்கிலக்கு ஆசார்ய தோஷம்) என்றது - இவனுடைய அஜ்ஞாநத்துக்கு விஷயம், ஆசார்யன் திருமேனி ஸ்வபாவஜமாய் ஆகந்துகமாயுள்ள தோஷமென்கை. (ஶக்திக்கிலக்கு ஆசார்ய கைங்கர்யம்) என்றது-இவன் ப்ரவ்ருத்தி ஶக்திக்கு விஷயம்,ஸ்வாசார்யனுக்குகப்பாகச்செய்யும் கைங்கர்யமென்கை. (அஶக்திக்கிலக்கு நிஷித்தாநுஷ்டாநம்) என்றது - இவனுடைய அஶக்திக்கு விஷயம், ஸ்வரூபோபாய புருஷார்த்த விரோதிகளான ஶாஸ்த்ர நிஷித்தங்களினுடைய அநுஷ்டாநமென்கை.

300. அவ.—இப்படி யிருந்துள்ள நிஷித்தத்தினுடையபடியை யருளிச்செய்கிறார்.

ஸூ —300 நிஷித்தந்தானும் நாலுபடியா யிருக்கும்.

வ்யா.—(நிஷித்தந்தானும்) என்று தொடங்கி. அதாவது - உபாதேயமான குணசதுஷ்டயம்போலே ஹேயமான நிஷித்தந்தானும் சதுர்விதமா யிருக்கு மென்கை.

301. அவ:—அந்நாலுபடியாவதுதா னேதெனனுமபேக்ஷையிலே.

ஸூ—301 அதாவது அக்ருத்யகரணமும், பகவதபசாரமும், பாகவதாபசாரமும், அஸஹ்யாபசாரமும்.

வ்யா:—(அதாவது அக்ருத்யகரணமும் பகவதபசாரமும் பாகவதாபசாரமும் அஸஹ்யாபசாரமும) என்று. அவைதன்னை யுத்தேஶிக்கிறார்.

302. அவ:—இவற்றினுடைய வேஷந்தா னேதென்னு மாகாங்க்ஷையிலே யிவற்றை யடைவே விவரிக்கிறார்.

ஸூ—302 அக்ருத்யகரணமாவது - பரஹிம்ஸை, பரஸ்தோத்ரம், பரதாரபரிக்ரஹம், பரத்ரவ்யாப

**ஹாரம், அஸத்யகதநம், அபக்ஷ்யபக்ஷணம் துடக்கமானவை.**

வ்யா:—(அக்ருத்யகரணமாவது) என்று துடங்கி. (பரஹிம்ஸையாவது)-631"நஹிம்ஸ்யாத ஸர்வபூதாநி" என்கிற விதியை யதிக்ரமித்து பண்ணும் பராணிபீடை. (பரஸ்தோத்ரமாவது) - பராபத விஷய ஸ்தோத்ரார்ஹமான வாக்கைக்கொண்டு அபராப்த விஷயங்களை ஸ்துதிக்கை. (பரதார பரிக்ரஹமாவது) - பிறர்க் கநர்ஹமான ஸ்த்ரீ விஷயங்களை மோஹாதிகளாலே ஸ்வீகரிக்கை. (பரத்ரவ்யாபஹாரமாவது) - பிறருடைமையானவற்றை, அவர்களிசைவின்றிக்கேயிருக்க, ப்ரகாசமாகவாதல் அப்ரகாசமாகவாதல் க்ரஹிக்கை. (அஸத்யகதநமாவது) - யதாத்ருஷ்டார்த்த விஷயமும் பூதஹிதமு மன்றிக்கே யிருக்கும் வசநத்தைச் சொல்லுகை. (அபக்ஷ்யபக்ஷணமாவது) - ஜாதயாச்ரயநிமித்த துஷ்டங்களாய்க்கொண்டு தனக்கு பக்ஷ்யமன்றிக்கே யிருக்குமவற்றை பக்ஷிக்கை. (துடக்கமானவை) என்றது-632 "பரத்ரவ்யேஷ்வபித்யாநம் மநஸாநிஷ்ட சிந்தநம் - விததாபி நிவேசச்ச த்ரிவிதம் காம மாநஸம் - பாருஷ்ய மந்ருதஞ்சைவ பைசுநஞ்சைவ ஸர்வச: - அநிபத்வ ப்ரலாபச்ச வாங்மயம ஸ்யாச் சதுர்விதம் - அதத்தாநா முபாதாநம் ஹிம்ஸாசை வாவிதாநத: - பரதாரோப ஸேவாச சாரீரம் த்ரிவிதம் ஸ்ம்ருதம்" இத்யாதிகளாலே மந்வாதி ஸ்ம்ருதிகளிற் சொல்லப்படுகிறவை யநேக மாகையாலே.

303. அவ:—அநந்தரம் பகவதபசாரத்தை விவரிக்கிறார்.

மூ:—303 **பகவதபசாரமாவது - தேவதாந்தரங்களோடொக்க ஈச்வரனை நினைக்கையும், ராம க்ருஷ்ணாத் யவதாரங்களில் மநுஷ்ய ஸஜாதீயதா புத்தியும், வர்ணாச்ரம விபரீதமான வுபசாரமும், அர்ச்சாவதாரத்தி லுபாதாந நிரூபணமும், ஆத்மாபஹாரமும், பகவத் த்ரவ்யாபஹாரமும் துடக்கமானவை.**

வ்யா:—(பகவதபசாரமாவது) என்று துடங்கி. (தேவதாந்தரங்களோடொக்க ஈச்வரனை நினைக்கையாவது)- 633"யே துஸாமாந்ய பாவேந மந்யந்தே புருஷோத்தமம் - தேவைபரஷண்டி ஜோஜ்ஞேயா:

ஸர்வகர்ம பஹிஷ்க்ருதா: ; யஸ்து நாராயணம் தேவம் ஸாமாந்யே நாபிமந்யதே - ஸயாதி நரகம் கோரம் யாவச் சந்த்ர திவாகரம்" என்று - தேவதாந்தரங்களோடு ஈஶ்வரனை ஸமபுத்தி பண்ணலாகா தென்று ஶாஸ்த்ரஞ் சொல்லாநிற்க, 634"அந்த:ப்ரவிஷ்டஶ் ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா, 635 "தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்; நதத் ஸமஸ் சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே" என்கிறபடியே-ஸ்வேதரஸகல நியாமகனாய் ஸமாநாதிக ரஹிதனான வீஶ்வரனை, 36"அங்காந்யந்யா தேவதா:" என்று - தச்சரீரதயாபிஹிதரான ப்ரஹ்மாதிதேவதைகளோடு ஸமபுத்தி பண்ணுகை. (ராமக்ருஷ்ணாத் யவதாரங்களில் மநுஷ்ய ஸஜாதீயதா புத்தியாவது) - 636 "அஜோபிஸந் நவ்யயாத்மா பூதாநா மீஶ்வரோபிஸந் - ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம் யாத்ம மாயயா" என்கிறபடியே-அஜஹத் ஸ்வபாவனாய் அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தாநத்தை யிதரஸஜாதீயமாக்கிக்கொண்டு துயரில்மலியும் மனிசர்பிறவியிற்றோன்றி நிற்கிற நிலையறியாதே, அவதாரத்தில் மெய்ப்பாட்டுக்காக வவன்செய்து காட்டின கர்பவாஸ ஜநந ஶோக மோஹாதிகளையிட்டு கர்மவஶ்யரான மநுஷ்யரோடு ஸஜாதீயனாக நினைக்கை. (வர்ணாஶ்ரம விபரீதமான வுபசாரமாவது) - ததாராதந தஶையில் த்ரைவர்ணிகார்ஹமான வைதிகமந்த்ரங்களாலே சதுர்த்த வர்ணரானவர்க ளாராதித்தல், உத்தமாஶ்ரமிகள் முதலானார் க்ருஹஸ்தவத் தாம்பூல நிவேதநாதிகளைப் பண்ணுதல் துடக்கமானவை. (அர்ச்சாவதாரத்தி லுபாதாந நிரூபணமாவது)-637 "தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவம்" இத்யாதிப்படியே - ஆஶ்ரிதர்க் கபிமதமான தேதேனுமொரு த்ரவ்யத்தைத் திருமேனியாக வங்கீகரித்து அதிலே அப்ராக்ருத விக்ரஹத்தில்பண்ணு மாதரத்தைப் பண்ணி எழுந்தருளியிருக்கிற வேற்றத்தை யறியாதெ, மாத்ருயோநி பரீக்ஷகரைப்போலே இதின்ன த்ரவ்யமன்றோவென்று விக்ரஹோபாதாநத்தை நிரூபிக்கை.

(ஆத்மாபஹாரமாவது-638 "யோநயதா ஸந்தமாத்மாந மந்யதா ப்ரதிபத்யதே-கிந்தேந நக்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்று ஸகலபாப மூலமாகச் சொல்லப்படுகிற பகவதேக ஶேஷபூதமான வாத்ம வஸ்துவில் ஸ்வதந்த்ரபுத்தி. (பகவத் த்ரவ்யாபஹாரமாவது) - அமுதுபடி சாத்துப்படிக் கர்ஹமானவற்றை ப்ரகாஶமாகவாதல் அப்ரகாஶமாகவாதல் தனக்காக்குகை. (துடக்கமானவை) என்றது - இன்னமிப்படி க்ரூரமாக ஶாஸ்த்ரங்களில்

சொல்லுமவை பலவுமுண்டாகையாலே. தவாத்ரிம்ஶ தபசாராதி களு முண்டிறே.

304. அவ—கீழ்ச்சொன்னவற்றோபாதி பகவத் த்ரவ்யாப ஹாரமும் பகவதநிஷ்டமா யிருக்குமோ வென்கிற ஶங்கையிலே, தானபஹரிக்கிறமாத்ர மன்றிக்கே அபஹரிப்பார்க்கு ஸஹகரிக்கை முதலானவையும் அவனுக்கநிஷ்டமா யிருக்கு மென்கிறார்.

**மூ—304 பகவத் த்ரவ்யத்தைத் தானபஹரிக்கையும், அபஹரிக்கிறவர்களுக்கு ஸஹகரிக்கையும், அவர்கள் பக்கலிலே யாசிதமாகவும் அயாசிதமாகவும் பரிக்ரஹிக்கையும், பகவானுக் கநிஷ்டமா யிருக்கும்.**

வ்யா.—(பகவத் த்ரவ்யத்தை) என்று துடங்கி. (தானபஹரிக்கையாவது) - நேரே தானே யிதுக்கு கர்த்தாவாய்ச் செய்கை. (அபஹரிக்குமவர்களுக்கு ஸஹகரிக்கையாவது) - நாமபஹரிக்கிறோ மில்லையிறே என்று நினைத்து, அபஹருத்தார்களுக்கு அநுமத்யாதிகளாலே ஸஹாயம் பண்ணுகை. (அவர்கள் பக்கலிலே யாசிதமாக பரிக்ரஹிக்கையாவது) - நாமிவ்வபஹாரத்துக்குக் கூட்டன்றே யென்று நினைத்து தானவர்கள் பக்கலிலே சிலவற்றை யபேக்ஷித்து வாங்கிக்கொள்ளுகை. (அயாசிதமாக பரிக்ரஹிக்கையாவது) - நாமபேக்ஷித்திலோமே என்று நினைத்து அவர்கள் தாங்களே தருமவற்றை வாங்குகை. (பகவானுக்கநிஷ்டமாயிருக்கும்) என்றது - இவை யித்தனையும் இவனுடைய வுஜ்ஜீவநபரனாய் கருஷிபண்ணிப் போரும் ஸர்வேஶ்வரன் திருவுள்ளத்துக் கநபிமதமா யிருக்கு மென்கை.

305. அவ—அநந்தரம், பாகவதாபசாரத்தை விவரிக்கிறார்.

**மூ—305 பாகவதாபசாரமாவது அஹங்காரார்த்த காமங்களடியாக ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பண்ணும் விரோதம்.**

வ்யா:—(பாகவதாபசாரம்) என்று துடங்கி. அதாவது பரோத்கர்ஷங்கண்டு ஸஹியாமைக்கும் ஸ்வோத்கர்ஷ புத்திக்கு முடலான வஹங்காரமடியாகவும், அவர்கள் வைஷ்ணவாகாரத்தை புத்திபண்ணி யிவர்க ளாசைப்பட்ட தொன்றுகில் இவற்றைவிட்டுப

வோக்தநயா * நடுவிற் பெருங் குடிபோலே யிருக்கிற பாகவதர்களோடு 823 "ஸாத்விகைஸ்ஸம்பாஷணம்" என்கிற ஸம்பந்த மெத்தைப் பற்றவேண்டுவ தென்கிறதாகி லென்கை.

442. அவ:—இப்ப்ரஶ்நத்துக் குத்தர மருளிச்செய்கிறார்.

மூ:—442. கொடியைக் கொள்கொம்பிலே துவக்கும்போது சுள்ளிக்கால் வேண்டுமாப்போலே, ஆசார்யாந்வயத்துக்கு மிதுவேணும்.

வ்யா:—(கொடியை) என்று தொடங்கி. அதாவது - † உபக்நாபேக்ஷமாய் வளருவதொரு கொடியை அதின் பரிணமத்துக் கெல்லா மிடங்கொடுக்கத்தக்க பெரியதொ ருபக்நத்திலே சேர்க்கும்போது, முதலிலே அது தன்னோடே சேர்க்கப்போகாமையாலே தரைப்படாமல் மூநதறத்தா னிதுக்காஶ்ரயமாய்க்கொண் டணுகி நின்று தன்னோட்டை யநவயமுமேந கொள்கொம்பிலே கொழுந்து யிக்கும் சுள்ளிக்கா லபேக்ஷிதமாமாப்போலே, கோல்தேடி யோடுங் கொழுநதுபோலே அபிமுகனை விச்சேதமின் ஆஶ்ரித ரதஃபதியாம லுத்தரிப்பிக்கும் மஹாதாஶ்ரயமான வாசார்யன் திருவடிகளி லநவயிக்கும்போது, முதலிலே ததநவயம் ஸித்திக்கை யரிதாகையாலே மூநதறத் தாங்க ளாஸநநராய் நின்று தங்களோடே யிணக்குவித்து அவ்வழியாலே யாசார்ய விஷயத்திலே சேர்க்கும் பாகவதர்க ளோட்டை ஸம்பநத மவஶ்யா பேக்ஷித மென்கை. இப்படி ஆசார்யாநவயத்துக்கடி பாகவதர்களாகில், (ஆசார்ய லாபம் பகவானாலே) [435] என்பானென் னென்னில்; அதுக்குக் குறையில்லை, பாகவதாநவயந்தனக்கடி யவனுகையாலே ஆபிமுக்ய பர்யந்தமாகத் தானே க்ருஷி பண்ணிக்கொண்டு வந்து பின்னை பாகவதர்களோடே யிணக்கி அவ்வழியாலேயிறே யவன்றான் ஆசார்ய விஷயத்திலே சேர்ப்பது; இதித்தனையும் இவரருளிச்செய்த த்ருஷ்டாந்தத்திலே ஸித்தம். எங்ஙனே யென்னில்; சேதநனை கொடியினுடைய ஸ்தாநேயாகவும், ஆசார்யனை கொள்கொம்பினுடைய ஸ்தாநேயாகவும், பாகவதர்களை சுள்ளிக்காலினுடைய ஸ்தாநேயாகவு மருளிச்செய்கையாலே, கர்ஷகனாயிருப்பானொருவன் ஸ்வப்ரயோஜநார்த்தமாக முதலிலே வித்தையிட்டு முளைப்பித்து கொழுந்து சரிக்குமளவும் வளர்த்துக்கொண்டு

* நடுவில் பெருங்குடி - க்ராம நடுவிலிருக்கும் குடியானவன்.
† உபக்நம் - கொடியேரும் பநதல்.

போநதொரு கொடியை, இதுக்கினி யொருபகநம வேணுமென்று தானே உபகநும்தேடி அதிலேசென்றேறுகைக்கு சுள்ளிககாலும் நாட்டி இவவழியாலே உபகநத்திலே சேர்க்குமாபபோலே, ஸாவ ஶேஷியான ஸாவேஶவரன ஸவபரயோஜநாாததமாக விசசேதநனை முதலிலேஸ்ருஷ்டிதது, 824 "ஈஶவரஸயசஸௌஹாாததம" இதயாதி ப்படியேக்ரமேணுபிமுகய பாயநதமாக விளேதது இவனுககோ ராசார் யனையும இன்னுனென்றுதானே திருவுள்ளம பறறி, அவனோடே சேர்க்கும பாகவதாகளோடே முதலநவயிபபிதது, அவவழியாலே ஆசாாய விஷயததிலே யநவயிபபிககுமென்னுமிடம் தோறறுகை யாலே, கொள்கொமபிலே யேறவிடட காஷகனுககே யநதக கொடியா லுளள பரயோஜநமாமாபபோலே, ஆசாாய விஷயத்தி லீஶவரன் சேர்த்த சேதநனுலுள்ள பரயோஜநமு மீஶவரனதே யென்னுமிட மும் பலிதம. இனி அசேதநமான கொள்கொம்புபோலன்றியே சேதநோத்தமனை விவவாசாாயன்ருனும பரஸம்ருத்யைக பர னுகையாலே. ஸவஶேஷியான வீஶவரனுடைய பரயோஜநமே ஸ்வ பரயோஜநமாக நினைத்திருககுமிறே.

443. அவ:—இனி (ஸ்வாபிமாநத்தாலே) [443] என்று து'டங்கி, (ஆசாாயாபிமாநமே யுததாரகம்) [447] என்னுமளவாக, இபபடி ததீயாமுனனுகபபறறபபடும ஸதாசாாயனுடைய வபி மாநமே யுஜ்ஜீவநததுக்கு உசிதோபாயமென்று இபபரபநத தாத் பாயத்தை பரகாஶிப்பிததருளுகிறுா. பெருவிலையனான வாபரணத துக்கு நாயககலபோலேயாயதது வசநபூஷணததுக கிப்பரதேஶம் நாயகரத்நமாயிருககும்படி. இததனையு மருளிசசெயகையைப பறற * அதிஷ்டிகையிட்டுககொணடுவநதது கீழடஙகலும்; மேலடஙகலும இதில நிஷ்டையை ஸ்தாபிககிறது. அதில பரதமததிலே, இவ்வாத தம் ஸதஸம ப்ரதாயஸிததமென்று ஸாவரும விஶவஸிககைககுட லாக இதுதமககு ஆபதோபதேஶலபத மென்னுமிடததை யருளிச செயகிருர்.

மூ.—443. "ஸ்வாபிமாநத்தாலே ஈஶ்வராபிமாநத்தைக் குலைத்துக்கொண்ட விவனுக்கு, ஆசார்யாபி மாநமொழிய கதியில்லை" என்று பிள்ளை பல காலுமருளிச்செய்யக் கேட்டிருககையா யிருக் கும்.

* அதிஷ்டிகை - அவதாரிகை.

வ்யா·—(ஸ்வாபிமாநத்தாலே) என்று தொடங்கி. அதாவது - "அநாதிகாலம் 'நானே எனக்கு நிர்வாஹகன்' என்றிருக்கும் தன்னுடைய ஸ்வாபிமாநத்தாலே, 'இவன் நமக்கு சேஷம்' இவன் கார்யம் நமக்கே பரம், என்று தன்னை உஜ்ஜீவிப்பிக்கைக்குடலான ஈச்வராபிமாநத்தை அழித்துக்கொண்ட இவனுக்கு, துர்கதியே பற்றாசாக அங்கீகரித்து தன்னுடைய உஜ்ஜீவநத்துக்கு க்ருஷிபண்ணிப் போரும் பரமதயாளுவான ஆசார்யன், 'இவன் நம்முடையவன்' என்றபிமாநித்திருக்கும் அந்த அபிமாநமொழிய வேறுஜ்ஜீவநோபாயமில்லை" என்று, ஸகல சாஸ்த்ரஸாரவித்அக்ரேஸரரான நம்பிள்ளை திருவடிகளிலே பழுக்கஸேவித்து தத்தேக பாரதந்த்ரராய் ஸகல சாஸ்த்ர தாத்பர்யங்களையும் அவர் அருளிச்செய்யக்கேட்டு தந்நிஷ்டராயிருக்கும் நம்முடைய ஆசார்யரான பிள்ளை, தஞ்சமாகப் பலகாலும் அருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்குமென்றபடி. ஆகையால் ஆசார்யாபிமாநமே இவ்வாத்மாவுக்கு உஜ்ஜீவநோபாயமென்று கருத்து.

444. அவ.—இப்படி, (ஆசார்யாபிமாநமொழிய கதியில்லை) [443] என்பானென், சாஸ்த்ரஸித்தங்களான பக்த்யாத்யுபாய விசேஷங்கள் உண்டே! என்கிற சங்கையிலே, இவையெல்லாமிவனுக்குபாயமன்றிக்கே நின்றமையை அடைவே அருளிச்செய்கிறார் மேல். அதில் ப்ரதமத்திலே, பக்தி உபாயமன்றியே நின்றபடியை அருளிச்செய்கிறார்.

**மூ·—444. ஸ்வஸ்வாதந்த்ர்ய பயத்தாலே பக்தி நழுவிற்று.**

வ்யா:—(ஸ்வஸ்வாதந்த்ர்ய) இத்யாதியாலே. அதாவது - பகவத்ப்ராப்தி ஸாதநதயா விஹிதையாய ஸ்வயத்நஸாத்யையான பக்தி, பகவதேகபாரதந்த்ர்யவிரோதியான ஸ்வஸ்வாதந்த்ர்யத்தை உண்டாக்குமென்னும் பயத்தாலே இவனுக்குபாயமன்றியிலே நழுவி நின்றதென்கை.

445. அவ·—அநந்தரம், ப்ரபத்தி உபாயமன்றியே நின்றபடியை அருளிச்செய்கிறார்.

**மூ·—445. பகவத் ஸ்வாதந்த்ர்ய பயத்தாலே ப்ரபத்தி நழுவிற்று.**

வ்யா —(பகவத ஸவாதந்தாய) இத்யாதியாலே, அதாவது - ஸவபாரதந்தாயாநுரூபையாய மஹா விஸவாஸரூபையான பரபத்தி, பந்தமோக்ஷாபய நிர்வாஹகனான பகவான தன்ஸவாதந்தாயததாலே மீளவும காமாநுகுணமாக வைததசிநதை வாஙகுவிதது ஸமஸரிபபிககில செயவதென என்கிறமஹாபயததாலே இவனுக குபாயமன்றியிலே நழுவிநினற தெனகை.

446. அவ:—அநநதரம, ஆசாரய விஷயததில ஸவகிய ஸ்வீகார முபாயுமன்றிககே யொழிநதமையை யருளிசசெயகிறுா.

மூ —446. ஆசார்யனையும் தான்பற்றும பற்று அஹங்கார கர்பமாகையாலே, காலன் கொண்டு மோதிரமிடுமோபாதி

வயா —(ஆசாராயனையும) எனறு துடஙகி. அதாவது - ஆசாரயனையும உபாயமாகததான ஸவீகரிககிற ஸவீகாரம, ஸவபலிதவகாதருதவரூபமாய் ஸவரூபநாஸகமா யிருககிற வஹஙகாரத்தை யளளே யுடைததா யிருககையாலே, ஸ்வ விநாஸகரமான காலனை பரிகரஹிதது அநதப பொனனுலே அங்குளீயக தாரணம பணணிுல அவதயகரமாமோபாதி தன்னுடைய ஸவரூபததுக கவதயகரமா யிருககு மெனகை ஆகையால இதுவும் உபாயமன்றியே நினறதென்று கருதது.

447. அவ — * பாரிஸேஷயாத கிழ தாமருளிசசெய்ததே யுபாயமென்று தலைககட்டுகிறுா.

மூ:—447. ஆசார்யாபிமாநமே உத்தாரகம்.

வ்யா·—(ஆசாராயாபிமாநமே யுததாரகம) என்று. அதாவது- மோக்ஷ ஸாதநதயா ஸாஸதர வஹிததஙகளான பகதயாதிகளொன்று முபாயமனறியிலே நின்ற பினபு, நிரதிஸய கருபாவானாய நிரஹேதுகமாகத தன்னை யஙகிகரிததருளி நிரபாயமாக நோககிக கொண்டுபோரு மாசாரயன் 'இவன நம்முடையவன்' எனறிருக்குமநதவபிமாநமே யிவனை ஸமஸாரததினின்று முததரிபபிககு மென்கை. ஆக, (ஸவதநதரனை யுபாயமாகததான் பற்றின போதிறே) [407] எனறு துடஙகி உபபாதிததுக கொண்டுவநத சரமோபாய ஸவரூபததை யுள்ளபடி ஸோதிதது நிரணயிததருளினாராய்தது.

* பாரிஸேஷயாத - மிகுநதவைகளினுலே,

448. அவ:—அநந்தரம், இவ்வுபாய நிஷ்டரான வதிகாரிக்கு கர்த்தவ்ய விஷயங்களை விஸ்தரேண வருளிச்செய்கிறார். அதில், ப்ரதமத்திலே, ஸுலபமான வாசார்ய விஷயத்தை விட்டு துர்லபமான பகவத் விஷயத்தை யிச்சிப்பானல்ல னென்னுமிடத்தை த்ருஷ்டாந்த முகேந வருளிச்செய்கிறார்.

மூ:—448. கைப்பட்டபொருளைக் கைவிட்டு புதைத்த பொருளைக் கணிசிக்கக்கடவ னல்லன்.

வ்யா:—(கைப்பட்ட) இத்யாதியாலே. அதாவது - கையிலே யிருக்கிற தநம்போலே அதிஸுலபனா யிருக்கிற ஆசார்யனைக் குறைய நினைத்து அநாதரத்தாலே கைவிட்டு, பூமியிலே பிறர் புதைத்துவைத்த தநம்போலே எட்டப்படாமையாலே "அரும்பொருள்" என்னும்படி துர்லபமான பகவத் விஷயத்தை ரக்ஷகமாகப் பற்ற விச்சிக்கக்கடவ னல்ல னென்கை. 825 "ஸுலபம் ஸ்வ குரும் த்யக்த்வா துர்லபம் யஉபாஸதே - லப்தம் த்யக்த்வா தநம் மூடோ குப்த மந்வேஷதி க்ஷிதௌ" என்றும் 826 "பற்று குருவை" என்று துடங்கி, 826 "தன்-கைப்பொருள் விட்டாரேனும் காசினியில் தாம் புதைத்த - வப்பொருள் தேடித் திரிவானற்று" என்றும் சொல்லக் கடவதிறே.

449. அவ:—இன்னமும் சில த்ருஷ்டாந்த முகத்தாலே, ஸுலபமான வாசார்ய விஷயத்தை விட்டு துர்லபமான பகவத் விஷயத்தை யாசைப்படுவானல்ல னென்கிறார் மேல்.

மூ:—449. விடாய் பிறந்தபோது கரஸ்தமான வுதகத்தை யுபேக்ஷித்து ஜீமூத ஜலத்தையும் ஸாகர ஸலிலத்தையும் ஸரித் ஸலிலத்தையும் வாபீ கூப பயஸ்ஸுக்களையும் வாஞ்சிக்கக் கடவனல்லன்.

வ்யா:—(விடாய் பிறந்தபோது) என்று துடங்கி. அதாவது - * பிபாஸை விஞ்சினபோது சடக்கென பாநம்பண்ணலாம்படி பாத்ரகதமாய்க்கொண்டு தன் கையிலிருக்கிற ஜலத்தை ஸுலபதையே ஹேதுவாக வநாதரித்துத் தரையிலே † யுகுத்து, ஆகாஶஸ்தமாய்க்

* பிபாஸை விஞ்சினபோது - தாகம் அதிகமானபோது.

† உகுத்து - கொட்டி.

கொண்டெட்டாதபடியாயும், பூமிஸ்தமாயிருக்க தூரஸ்தமாயும், ஆஸந்நமாயிருக்கச்செய்தே பெருகுங்காலமொழிய மற்றைக்காலமின்றிக்கேயும், எப்போது முண்டானாலும் அவ்வளவும் சென்று ஜீவிக்கவேண்டியும், இருந்தவிடந்தன்னிலே யுண்டாயும் * கநித்ராதிகள்கொண்டு † கலவிப் பெறவேண்டியிருக்கும் ‡ ஜீமூதாதிகளின் ஜலத்தை யாசைப்படுமவனைப்போலே, ரக்ஷகாபேக்ஷை பிறந்த தசையிலப்போதே தனக்கு குதவும்படி கைபுகுந்திருக்கிற வாசார்ய விஷயத்தை ஸௌலப்யமே பற்றாசாக உபேக்ஷித்து, பரமாகாசவர்த்தியாய துஷ்ப்ராபமாயிருக்கிற பரத்வத்தையும், பூமியிலேயாயும க்ஷீராப்தியளவும் செல்ல வல்லவர்களுக்கன்றியே யுதவாத வ்யூஹத்தையும், ஆஸந்நமாக வந்தும தாத்காலிகர்க்கொழிய பாஸ்சாத்யர்க்கு தவாத விபவத்தையும், நித்யஸந்நிதி யுண்டாயும ஸம்பாஷணாதிகளாலிவனோடு கைகலந்திராத வர்ச்சாவதாரத்தையும், இருக்கிறவிடந்தன்னிலே யுண்டாயிருந்ததாகிலும் யமநியமாதி க்ரமேண யதநித்து த்ரஷ்டவ்யமாமிதனத்தையு மாசைப்படக்கடவனல்லனென்கை. 827 'சக்ஷுர்கம்யம்குரும் த்யக்த்வா ஸாஸ்த்ரகம்யந்து யஸ்மரேத - ‖ கரஸ்தமுதகம் த்யக்த்வா கநஸ்த மபிவாஞ்சதி" என்றும-827 "எட்டவிருந்த குருவை யிறையன்றென்று விட்டு" என்று துடங்கி, 827 "அம்புததைப் பார்த்திருப்பானற்று" என்றும் சொல்லக்கடவதிறே. இது வ்யூஹாதிகளுக்கு முபலக்ஷணம்.

450. அவ:—இப்படி ஸுலபமான வாசார்ய விஷயம் ஸ்வரக்ஷணத்துக்குடலாயிருக்க இதனை யுபேக்ஷித்தது துர்லபமான பரத்வாதிகளை । வாஞ்சிக்கக் கடவனல்லனேயாகிலும, ப்ராப்யதவேந வவை யிவனுக்கு வாஞ்சநீயங்களன்றோ வென்ன ; அவையெல்லா மாசார்யனேயென் றிருக்கக்கடவனென்கிறார்.

**மூ:—450 பாட்டுக் கேட்குமிடமும், கூப்பீடு கேட்குமிடமும், குதித்த விடமும், வளைத்த விடமும், ஊட்டுமிடமும், எல்லாம் வகுத்தவிடமே யென் றிருக்கக்கடவன்.**

---

* கநித்ராதிகள் - மண்வெட்டி முதலானவைகள். † கலவி - தோண்டி. ‡ ஜீமூதம் - மேகம். । வாஞ்சிக்க - ஆசைப்பட. ‖ "ஹஸ்தஸ்தமுதகம்" என்று பாடாந்தரம்.

வ்யா:—(பாட்டுக் கேட்குமிடமும்) என்று துடங்கி. அதாவது-828 "ஏதத் ஸாமகாயந் நாஸ்தே" என்கிறபடியே நிரந்தராநுபவபரரான நித்யமுக்தர் அநுபவத்துக்குப் போக்குவீடாகப் பண்ணும் ஸாமகாநம் கேட்கும் ஸ்தலமான பரமபதமும், அஸுர ராக்ஷஸ பீடிதரான ப்ரஹ்மாதி தேவர்களார்த்தநாதம் கேட்கச் செவி கொடுத்துக்கொண்டு கண்வளரும் வ்யூஹ ஸ்தலமும், அவர்களார்த்த த்வநி கேட்டுத் துடித்துக்கொண் டெழுந்திருந்து 829 "நாக பர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்" என்கிறபடியே திருப்பாற் கடலிலே திருவரவணையில் நின்று மிவ்வருகே வரக் குதிப்பாரைப்போலே வந்தவதரித்த வவதார ஸ்தலமும், நினைத்தது தலைக்கட்டுமளவும் மலையாளர் வளைப்புப்போலே இட்டவடி பேர விடாதே வளைத்துக்கொண்டிருக்கிற வர்ச்சாவதார ஸ்தலங்களும், 830 "ஏஷாமிந்தீவர ஸ்யாமோ ஹ்ருதயே ஸுப்ரதிஷ்டித:" என்றும் 831 "ஒண்சங்கதை வாளாழி யானொருவ னடியேனுள்ளானே" என்றும் சொல்லுகிறபடியே ஹ்ருதய கமலத்திலே யிருந்து தானுகந்தார்க்குத் தன்னழகை புஜிப்பிக்கும் அந்தர்யாமித்வ ஸ்தலமாகிற விந்த ப்ராப்ய ஸ்தலங்களெல்லாம், தனக்கு வகுத்த ஸ்தலமாய் ப்ராப்யமா யிருக்கு மாசார்ய விஷயமேயென் றத்யவஸித் திருக்கக் கடவனென்கை. (வளைத்தவிடமாவது) - பிறரறியாதபடி திரைவளைத்துக்கொண்டிருக்கிற வந்தர்யாமித்வ ஸ்தலம்; (ஊட்டுமிடமாவது) - சக்ஷுர் விஷயமா யிருந்து தன் வடிவழகையும் குணங்களையும் ஆஸ்ரிதரை புஜிப்பிக்கு மர்ச்சாவதார ஸ்தலமென்று சொல்லவுமாம். 832 "யேநைவ குருணா யஸ்ய ந்யாஸ வித்யாப்ரதீயதே - தஸ்ய வைகுண்ட துக்தாப்தி த்வாரகாஸ் ஸர்வ ஏவஸ:" என்றும் 833 "வில்லார்மணி கொழிக்கும்" என்று துடங்கி 833 "அருளாலே வைத்தவவர்" என்றும் சொல்லக் கடவதிறே. அன்றிக்கே (பாட்டுக் கேட்குமிடம்) இத்யாதிக்கு, ரக்ஷகமாக வவற்றை யாசைப்படக் கடவனல்லனென்கிற வளவன்றிக்கே அவையெல்லாம் தனக் கிவ்விஷயமேயென்றிருக்கக்கடவ னென்கிறதென்று கீழோடே சேர யோஜிக்கவுமாம்.

**451.** அவ:—ஏவம்பூதனான விவ்வதிகாரிக்கு ஸ்வரூபநாஸகத்வ ஸ்வரூப வர்த்தகத்வ தது உபய ரஹிதத்வங்களால் ப்ரதிகூலராயும் அநுகூலராயும் அநுபயராயு மிருக்குமவர்களை தர்ஸிப்பிக்கிறார் மேல்.

மூ·—451. இவனுக்கு ப்ரதிகூலர், ஸ்வதந்த்ரரும் தேவதாந்தரபரரும்; அநுகூலர், ஆசார்ய பாரதந்த்ரர்; உபேக்ஷணீயர், ஈஸ்வரபரதந்த்ரர்.

வயா—(இவனுக்கு ப்ரதிகூலர்) என்று தொடங்கி. அதாவது - இப்படி ஆசார்யாபிமாந நிஷ்டனாய் ப்ரதவாதி பஞ்சகத்திலுமுள்ள ப்ராவண்யமடைய விவ்விஷயத்திலே ஒருமடைப் படுத்தி, 834"தேவுமற்றறியேன்" என்றிருக்கு மிவ்வதிகாரிக்கு, அனுகூலாதமநாஸத்தைப் பிறப்பிக்கும் ப்ரதிகூலர், ஆத்மாபஹாரிகளான ஸ்வதந்த்ரரும், பாரதந்த்ரயத்துக்கு கிஞ்சத்துவைத்துப் பகவத் வ்யதிரிக்த தேவதைகளுக்கு பரதந்த்ரரா யிருக்குமவர்களும், ஸ்வஸம்ஸர்க்கத்தாலே ஸ்வரூபத்தை வளர்க்கு மநுகூலர், ஸ்வரூபத்தை யுள்ளபடி யுணர்ந்து தச்சரமாவதி நிஷ்டரான ஸதாசார்ய பரதந்த்ரர், இப்படி ஸ்வரூப நாஸகரும் ஸ்வரூப வர்த்தகருமல்லாமையாலே வெறுவுதலுக்கும் விரும்புதலுக்கும் விஷயமல்லாத உபேக்ஷணீயர், சரமபர்வமான வாசார்ய பாரதந்த்ரயத்தி லூற்றமன்றியிலே ப்ரதம பர்வமான ஈஸ்வர பாரதந்த்ரயத்திலே யூன்றியிருக்குமவர்கள் என்றபடி. ப்ரதிகூலரைச் சொல்லுகிறவிடத்தில ஸ்வதந்த்ர தேவதாந்தரபரதந்த்ரரிருவரையுஞ் சொன்னவிது, ப்ரதிபத்தி ப்ரகரணத்திற் சொன்ன மற்றுள்ள ப்ரதிகூலர்க்கு முபலக்ஷணம். ப்ரதமபர்வ நிஷ்டனுக்கு ப்ரதிகூலமானவர்கள் இவனுக்கு ப்ரதிகூலரல்லாமை யில்லையிறே. இத்தால - கீழ் பகவத் ப்ரபந்நாதிகாரிக்கு ஸஹவாஸ நிவ்ருத்திகளுக்குறுப்பாக வநுகூல ப்ரதிகூல தர்ஸநம் பண்ணுவித்தாப்போலே, ஆசார்யாபிமாந நிஷ்டனான விவனுக்கும ஸஹவாஸ நிவ்ருத்தி விஷயமான ப்ரதிகூலரையும் ஸஹவாஸ விஷயமான வநுகூலரையும் தர்ஸிப்பித்தது, தத்திக்கமான உபேக்ஷணீய விஷயமு மிவனுக்கொன்றுண்டென்னுமிடம தர்ஸிப்பித்ததாயத்து. 263-5 *

452. அவ—இவ்வதிகாரிக்குண்டாகவேண்டும ப்ரதிபத்யநுஷ்டானங்களைப் பலபடியாக அருளிச்செய்தார் கீழ்; இந்த ப்ரஸங்கத்திலே அந்யோபாய நிஷ்டருடைய ஜ்ஞாநாநுஷ்டாநங்களுக்கும் இவனுடைய ஜ்ஞாநாநுஷ்டாநங்களுக்கு முண்டான விநியோக விஶேஷத்தை யருளிச்செய்கிறார் மேல்.

மூ·—452. ஜ்ஞாநாநுஷ்டாநங்க ளிரண்டும் அல்லாதார்க்குபாயாங்கமா யிருக்கும்; இவனுக்கு *உபேயாங்கமா யிருக்கும்.

* "உபேயமாயிருக்கும்" என்னும பாடாந்தரம் வ்யாக்யாநத்தில ஸுஸ்பஷ்டம்.

வ்யா:—(ஜ்ஞாநாநுஷ்டாநங்க ளிரண்டுக்கும்) என்று தொடங்கி அதாவது - தத்வ்ஜ்ஞாநமும் ததநுரூபமான வநுஷ்டாநமும், ஆசார்யாபிமாந நிஷ்டனான விவனையொழிந்த வதிகாரிகளுக்கு, உபாய மதிகாரிஸாபேக்ஷமாகையாலே உபேயப்ராப்தியளவும் உபா யாதிகாரம் நழுவாமல்நடக்கைக்குறுப்பாய்க்கொண்டுஅவ்வழியாலே யுபாயஶேஷமா யிருக்கும்; ஆசார்யாபிமாநமே யுத்தாரகமாகையா லுபாயாதிகார ஶேஷமாக வேண்டுவதொன் றில்லாமையாலே, இவ் வதிகாரிக்குண்டான ஜ்ஞாநாநுஷ்டாநங்களிரண்டும் ஆசார்யன் முகமலர்த்தியாகிற வுபேயத்துக்கு ஶேஷமாயிருக்கு மென்கை. (இவனுக் குபேயமாயிருக்கும்) என்று பாடமானபோது, ஆசார்ய னுக் கபிமதமாய்க்கொண்டு இவைதா னிவனுக்கு பேயமாயிருக்கு மென்றபடி.

453. அவ:—இப்படி ஜ்ஞாநாநுஷ்டாநங்களிரண்டும் ஆசார்ய ப்ரீதி ஹேதுவாக நினைத்துக் குறிகொண்டு வர்த்திக்கு மிவ்வதி காரிக்கு அவஶ்யம் நிவர்த்தநீயங்களை யருளிச்செய்வதாகத் திருவுள் ளம்பற்றி, ப்ரதமம் நிஷித்தாநுஷ்டாநம் த்யாஜ்யமென்னுமதத்தை யருளிச்செய்கிறார்.

மூ:—453. இவனுக்கு நிஷித்தாநுஷ்டாநம், தன்னை யும் பிறரையும் நஶிப்பிக்கையாலே த்யாஜ்யம்.

வ்யா:—(இவனுக்கு நிஷித்தாநுஷ்டாநம்) என்று தொடங்கி. அதாவது - ஏவம்பூதனான விவ்வதிகாரிக்கு பரதாரபரிக்ரஹாதி நிஷித்தாநுஷ்டாநம், ஸ்வவிநாஶத்தையும் ஸ்வாநுஷ்டாநங்கண்ட பரருடைய விநாஶத்தையும் பண்ணுகையாலே பரித்யஜிக்கப்படுமது தொன்றென்கை.

454. அவ:—உபயவிநாஶமு மித்தாலே வருகிறபடி யெங்ஙனே யென்ன வருளிச்செய்கிறார்.

மூ:—454. தான் நஶிக்கிறது, மூன்றபசாரத்திலும் அந் வயிக்கையாலே; பிறர் நஶிக்கிறது, தன்னை யநாதரித்தும் தன்னநுஷ்டாநத்தை யங்கீ கரித்தும்.

வ்யா:—(தான் நஶிக்கிறது) என்று தொடங்கி. அதாவது - ஆசார் யாபிமாநத்திலே யொதுங்கி பகவத் பாகவதாசார்ய விஷயங்கள்

மூன்றுக்கு மபிமத விஷயமா யிருக்கிறதான் ஈஸ்வரிக்கிறது, அம்மூவர்க்கு மிது அநிஷ்டமாகையாலும், (அபசாரமாவது)-அநிஷ்டகரணமாகையாலும், அதிக்ரூரமான வுபசாரத்ரயத்திலு மந்வயிக்கையாலே; பிறர் ஈஸ்வரிக்கிறது, சரமபாவபர்யந்தமாக வந்துநிற்கிற பாகவதோத்தமனை தன்னை நிஷித்தாநுஷ்டாநம் பண்ணினவனென்று அநாதரித்தும், தத்வவித்தான விவனிப்படி செய்கிறான் இதில் தோஷமில்லையாகப்பட்டன்றோ! நமக்குப் பின்னை யென்! என்று தன்னுடையவநுஷ்டாநத்தைத் தாங்க ளங்கீகரித்து மென்கை. அநாதரிப்பார் பாகவத வைபவமறியாதவர்கள், அநுஷ்டாநத்தை யங்கீகரிப்பார் ப்ராப்தாப்ராப்த விவேகஶூந்யரானவர்கள். அநுஷ்டாநத்தை யங்கீகரிக்கிறவர்கள் ஈஸ்வரிக்கிறார்கள், அநாதரிக்கிறவர்கள் ஈஸ்வரிப்பானென், தோஷங்கண்டா லநாதரிக்கலாகாதோ வென்னில; ராஜபுத்ரனுக்கு தோஷமுண்டானால் ராஜா தான் ஶிக்ஷித்துக் கொள்ளுமத்தொழிய அவனை யநாதரித்தவர்கள் மேலே நிக்ரஹம் பண்ணி தண்டிக்குமாப்போலே, ஸ்வாபிமதனானவிவனுக்கு தோஷமுண்டானாலும் ஸர்வேஶ்வரன்றானே திருத்திக்கொள்ளுமத்தொழிய பிறரநாதரிக்கப் பொறாமையாலே, அநாதரித்தவர்களுக்கு விநாஶமே பலிக்கையாலே அநாதரிக்கலாகாது. 835 "அபிசேத்ஸு துராசாரோ பஜதேமா மநந்யபாக்-ஸாதுரேவ ஸமந்தவ்யஸ ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ:" என்று உபாஸக விஷயமாக வருளிச்செய்தபடி கண்டால், எல்லை நிலத்திலே வந்து நின்ற விவ்வதிகாரிவிஷயத்தி லவனிருக்கும்படி சொல்லவேண்டாவிறே, ஆகையால், இப்படி தானும் பிறரும் ஈஸ்வரிக்கும்படி யிருக்கையாலே இவனுக்கு நிஷித்தாநுஷ்டாநம் பரித்யாஜ்யமென்ற தாயத்து.

455. அவ—இப்படி பரதாராதிபோகம் ஸ்வபரவிநாஶஹேதுவாகைக்கடி, ஶாஸ்த்ர நிஷித்தமாகையிறே; இங்ஙனன்றிக்கே, ஶாஸ்த்ரவிஹித விஷயமான ஸ்வதாரபோகத்துக்குக் குறையில்லையே யென்ன வருளிச்செய்கிறார் மேல.

மூ.—455. விஹிதபோகம், நிஷித்தபோகம் போலே லோகவிருத்தமுமன்று, நரகஹேதுவுமன்று; ஆயிருக்கச்செய்தே, ஸ்வரூப விருத்தமுமாய் வேதாந்த விருத்தமுமாய் ஶிஷ்ட கர்ஹிதமுமாய் ப்ராப்ய ப்ரதிபந்தகமுமா யிருக்கையாலே த்யாஜ்யம்.

வ்யா:—(விஹிதபோகம்) என்று தொடங்கி. அதாவது-விஶிஷ்ட வேஷவிஷயியான ஶாஸ்த்ரத்தாலே விதிக்கப்பட்ட ஸ்வதாரத்தில் போகம், தாத்ருஶ ஶாஸ்த்ர நிஷித்தமான பரதார பரிக்ரஹம் போலே லோகவிருத்தமுமன்று, செம்பினுலியன்ற பாவையைத் தழுவுகை முதலான கோர துக்காநுபவம் பண்ணும் நரகஹேதுவு மன்று ; இப்படி ப்ரத்யக்ஷபரோக்ஷ ஸித்தங்களான லோகவிருத் தத்வ நரகஹேதுத்வங்களிரண்டு மற்றிருக்கச்செய்தே, அநந்ய போகத்வ ரூபமான ஸ்வரூபத்துக்கு விருத்தமுமாய், 836 "ஶாந்தோ தாந்த உபரத ஸ்திதிக்ஷு: ஸமாஹிதோ பூத்வா ஆத்மந்யேவாத் மாநம் பஶ்யேத்" இத்யாதிகளாலும் திருமந்த்ராதிகளாலும் - உபா ஸகனோடு ப்ரபந்நனோடுவாசியற இருவர்க்கும் விஷயபோகமாகா தென்னுமிடத்தை ப்ரதிபாதிக்கிற வேதாநதத்துக்கு விருத்தமுமாய், தோஷதர்ஶநத்தாலும் அப்ராப்த தர்ஶநத்தாலும் விஷயபோகத்தை யருவருத்திருக்கு மாசாரப்ரதாநரான ஶிஷ்டர்களாலே ஹேய மென்று நிந்திக்கப்பட்டிருப்பதுமாய், அப்ராப்தவிஷய விரக்தி ப்ரியனான வாசார்யனுக் கநபிமதமாகையாலே ஆசார்யமுககமல விகா ஸாநுபவரூப ப்ராப்யத்துக்கு ப்ரதிபந்தகமுமாய், இப்படி அநேகாநர்த்தாவஹமா யிருக்கையாலே இவ்வதிகாரிக்கு பரித்யாஜ்ய மென்றபடி.

456. அவ:—போக்யதா புத்தியைவிட்டு தர்மபுத்யா ப்ரவர்த் திக்குமளவில் இவை யொன்றுமில்லையே யென்ன வருளிச்செய்கிறார் மேல்.

**மூ:—456. போக்யதாபுத்தி குலைந்து தர்மபுத்யா ப்ர வர்த்தித்தாலும் ஸ்வரூபம் குலையும்.**

வ்யா:—(போக்யதா புத்தி குலைந்து) என்று தொடங்கி. அதா வது - விஹித விஷய ப்ரவ்ருத்தியில் காமுகதயாவரும் போக்யதா புத்தியை விட்டு, உபாஸகரான மஹர்ஷிகள் தொடக்கமான ஶிஷ்டர் * பைத்ருகருணமோசக ப்ரஜோத்பாதநார்த்தமாகவும் ஸ்நாந திவஸ த்தி லங்கிகரியாவிடில் † ப்ருணஹத்யாதி தோஷமுண்டென்னுமத் தைப் பற்றவும் தர்மபுத்யா ப்ரவர்த்திக்குமாப்போலே இவனுமப் படி தர்மபுத்யா ப்ரவர்த்தித்தாலும், ஸித்ததர்மநிஷ்டனான இவ

* பைத்ருக ருணம் மோசக - பித்ருதேவதா கடனை நிவ்ருத்தி பண்ணுகைக்கு. † ப்ருணஹத்தி-கர்ப்பத்தை நாசம் பண்ணுதல்.

னுக்கு அநயதர்மாநநவயம் விரோதியாகையாலே அநநயோபாயதவ ரூபமான ஸ்வரூபம் குலையு மென்கை. இததால - போகயதா புதயா பரவாததிககில் அநநய போகத்வரூபமான ஸ்வரூபம் குலை யுமோயாதி, தர்மபுத்யா பரவர்ததிககில் அநநயோபாயதவ ரூபமான ஸ்வரூபம் குலையும்; ஆனபின்பு, ஒருபடியாலு மிவ்வதிகாரிக்கு விஹித விஷய பரவ்ருதநி யாகாதென்றதாய்த்து. ஆகையால ஏதேனு மொருபடி யநவயிததாலும ஸ்வரூபஹாநி தபபாது, ஆன பின்பு பரிதயஜிககவேணு மென்னுமிடம நிரூபிதமிறே.

457. அவ:—இபபடி ஸ்வரூபஹாநி வருமென்னும் பயத தாலே விடுகிறவளவு போராது. பராபத விஷயபரவண சிததகை யாலே பராகருத ஸகல போகய வஸ்துககளும் பரதிகூலமாய்த் தோற்று மவஸ்தை பிறககவும்வேணும் ஸ்வரூபம் குலையாமைக் கென்கிறா மேல.

மூ—457. "க்ஷேத்ராணி மித்ராணி" என்கிற ஶ்லோ கத்தி லவஸ்தை பிறக்கவேணும் ஸ்வரூபம் குலையாமைக்கு.

வயா—(க்ஷேத்ராணி) என்று துடங்கி. அதாவது-837 "க்ஷேத் ராணி மிதராணி தநாநி நாத புத்ராஶ்ச தாரா: பஶவோ க்ருஹாணி - த்வத பாதபத்ம பரவணாத்ம வ்ருத்தேர் பவநதி ஸர்வே ப்ரதிகூல ரூபா:" என்று பேரருளாளரான பெருமானைக் குறித்து பரஹமா விஜஞாபிதத ஶ்லோகத்திற சொலலுகிற க்ஷேத்ரமித்ர தநாதிகளான ஸமஸ்தவஸ்துககளு மக்நிகல்பமாய்த் தோற்றும்படியான வவ ஸ்தை பிறக்கவேணும ஸ்வரூப ப்ரச்யுதி பிறவாமைக கென்கை. இஶ்ஶ்லோகாாததத்தை 838 "நல்ல புதல்வர்" இத்யாதியாலே அரு ளாளப பெருமாளெம்பெருமானரு மருளிச்செய்தாரிறே.

458. அவ:—இனிமேல் பராபய பூமியில ப்ராவண்யாதித்ர யமு மிவனுக் கவஶ்யாபேக்ஷிதமென்னுமத்தை யறிவிக்ககககாக, அவற்றினுடைய உபாய சதுஷ்டயாஸாதாரண்யததை யருளிச் செய்கிறா.

மூ—458. ப்ராப்ய பூமியில் ப்ராவண்யமும், த்யாஜ்ய பூமியில் ஜிஹாஸையும், அநுபவாலாபத்தி

லாத்மதாரணயோக்யதையும், உபாய சதுஷ்டயத்துக்கும் வேணும்.

வ்யா:—(ப்ராப்ய பூமியில்) என்று தொடங்கி (ப்ராப்ய பூமியாவது) - தனக்கு வகுத்த சேஷியான விஷய மெழுந்தருளி யிருக்கிற தேசம; (த்தப்ராவண்யமாவது) - அத்தேசத்தைக் கிட்டியல்லது தரியாத அதிமாத்ரமான வாஞ்சை. (த்யாஜ்ய பூமியாவது)-அவ்விஷயத்தை யகன்றிருக்கைக்கு உடலான தேசம; (த்ஜ்ஜிஹாஸை யாவது) - இத்தைவிட்டே நிற்கவேணுமென்னு மிச்சை. (அநுபவாலாபத்தி லாத்ம தாரணயோக்யதையாவது) - வகுத்த சேஷியான விஷயத்தினுடைய விக்ரஹாத்யநுபவம பெறாதபோது, தேஹதாரணமான போஜநமில்லாவிடில் தேஹம் தரியாதாப்போலேதான் தரித்திருக்கைக்கு யோக்ய னன்றிக்கே யிருக்கை. (உபாய சதுஷ்டயத்துக்கும வேணும) என்றது - இவையித்தனையும, உபாய சதுஷ்டயாதிகாரிகளுக்கு மதிகாராநுகுணமாக வேணுமென்றபடி. (உபாய சதுஷ்டயமாவது) - (ஸ்வஸ்வாதந்த்ர்ய பயத்தாலே) [444] என்று தொடங்கி அருளிச்செய்த பக்தி ப்ரபத்திகளும், ஆசார்ய விஷயத்தில் ஸ்வகதபரகத ஸ்வீகாரங்களும. பகவத் விஷயத்தில ஸ்வகத பரகத ஸ்வீகாரங்களுமாகவுமாம. இதிலும முற்பட்ட யோஜனைக் கௌசித்யமுண்டு; கீழே நாலுபாயத்தையும் சேர விவாதமே யருளிச்செய்தத்துக்குச் சேருகையாலே. இதில பக்தி ப்ரபத்தி நிஷ்டரிருவர்க்கும, 839 "மாக வைகுந்தம காண்பதற்கென்மனமேகமெண்ணும" என்கிற-ப்ராப்ய பூமியான பரமபதத்திலே ப்ராவண்யமும, 840 "வரம்ஹுதவஹஜ்வாலா பஞ்ஜராந்தா வ்யவஸ்திதி: - நசௌரிசிந்தா விமுக ஜந ஸம்வாஸ வைசஸம" 841 "கொடுவுலகங் காட்டேல்" என்னுமபடி - ப்ராப்ய வஸ்துவை யிழந்து ப்ராக்ருதமத்யே யிருக்கைக்குடலான ஸம்ஸாரமாகிற த்யாஜ்ய பூமியில் ஜிஹாஸையும, 842 "உன்னை விட்டொன்று மாறற்கிறகினறிலேன்" என்கிறபடியே-பகவதநுபவாலாபத்தி லாத்மதாரணயோக்யதையு மவச்யமுண்டாக வேணும். ஆசார்ய விஷயத்தில ஸ்வகத பரகத ஸ்வீகார நிஷ்டரான விருவருக்கும் (எல்லாம வகுத்தவிடமே) [450] என்றிருக்கையாலே - ஆசார்ய னெழுந்தருளி யிருந்த தேசம ப்ராப்ய பூமியாய், அவனைப் பிரிந்திருக்கிற விடமத்யாஜ்ய பூமியாய், அவனுடைய விக்ரஹாதிகளே அநுப்வ விஷயமு மாகையாலே, ப்ராப்ய பூமியில ப்ராவண்யாதிகள் மூன்று மிதுக்கநுகுணமாக அவச்ய

முண்டாகவேணு மென்று, அதிகாராநுகுணம விபஜித்துச் சொல்லக் கடவது. அன்றிக்கே, 843 "மதுரகவி சொன்ன சொல் நம்புவார் பதி வைகுந்தம்" என்று - தாமருளிச்செய்த ப்ரபந்தத்தை யப்யஸித்தவர்களுக்கு வாஸஸ்தாநம் ததீய வைபவமே நடக்கும் ஸ்ரீவைகுண்டமென்று ஸ்ரீமதுரகவி யாழ்வா ரருளிச்செய்கையாலும், சரமபர்வ நிஷ்டரானவர்களுக்கும் ஸ்வாசார்யனுகந்த பகவத் விஷயத்தில் பரிபூர்ணாநுபவாதிகள் ஸித்திப்ப தவ்விபூதியிலேயாகையாலும், ப்ராப்ய பூமி பரமபதம்; இருள்தருமா ஞாலமாகையாலே அதுக்கு விரோதியான ஸம்ஸாரம் த்யாஜ்ய பூமி (அநுப வாலாபத்தி லாதம தாரணுயோகயதையாவது) - ஸவாசார்ய விஷயத்திலும் அவனுகந்த பகவத் விஷயத்திலு முண்டான வநுபவம் பெறுந்தனையில் தான் தரித்திருக்கமாட்டாமை என்றிவ்வர்த்தை யோஜிக்கவுமாம்.

459. அவ—உக்தோபாய சதுஷ்டயத்திலும் பகவத் விஷயத்தை யவலம்பித்திருக்கிற பக்தி ப்ரபத்திகளாகிற உபாய த்வயமுமிவ்வதிகாரிக்கு நழுவினபடி ப்ரகாரத்தைக் கீழருளிச்செய்த வநந்தரம், (ஆசார்யனையும் தான பற்றும் பற்று) [446] என்றும (ஆசார்யாபிமாநமே யுத்தாரகம்) [447] என்று மருளிச்செய்த ஆசார்ய விஷயத்தில் ஸ்வகத பரகத ஸ்வீகாரரூபோபாய த்வயத்துக்கும் ப்ரமாணம் தர்சநம் பண்ணுவிக்கவேணுமென்று திருவுள்ளம் பற்றி, ப்ரதமம் ஸ்வகத ஸ்வீகாரோபாயத்துக்கு ப்ரமாணம் காட்டுகிறார்.

**ஸூ—459. "பழுதாகா தொன்றறிந்தேன்" என்கிற பாட்டை பூர்வோபாயத்துக்கு ப்ரமாணமாக வநுஸந்திப்பது.**

வ்யா:—(பழுதாகாது) என்று தொடங்கி, ஆதாவது - அமோகமா யிருப்பதோ ருபாயமறிந்தேன்; ஆஸ்ரயிப்பார்க்கு ஸமாஸ்ரயணீயனாய்க்கொண்டு திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளுகிற வவனுடைய திருவடிகளைத் தப்பாத ப்ரகாரத்தை நினைத்து நாடோறு மநுகூல வ்ருத்தியைப் பண்ணிக்கொண்டு போரும் ஜ்ஞாநாதிகரைக் கண்டு தங்களுக்கு குத்தாரகராக வாஸ்ரயித்து உஜ்ஜீவிக்குமவர்கள், ஆத்மாவோ டவிநாபூதமான பாபத்தைப் போக்கி ஸ்ரீவைகுண்டத்தில் திருவாசல் திறந்து அங்கே ஸமருத்தரான ஜ்ஞாநாதிகளை

யுடையராய் ததீயகைங்கர்ய நிரதராய்க்கொண்டு வயாக துஷ்
யிருப்பார் என்று பரமாபதரான திருமழிசைப்பிரா ன்
செய்த[844] "பழுதாகாதொன் றறிந்தேன்" என்கிற பாட்டை ஆசார்ய
விஷயத்தில் முறபடச்சொன்ன ஸ்வகத ஸ்வீகாரமாகிற வுபாயத்
துக்கு ப்ரமாணமாக வநுஸந்திப்ப தென்கை.

இத்தால் - ஸ்வகத ஸ்வீகார மஹங்காரகர்ப்பதயா அவத்ய
கரமா யிருந்ததேயாகிலும பலஸித்தியில வந்தால பழுதுபோகா
தென்னுமிடம் சொல்லிற்றாயத்து.[845] "குருணாயோபி மந்யேத குரும
வா யோபிமந்யதே - தாவுபௌ பரமாம ஸித்திம் நியமா துபகச
சதஃ" என்று - பரகத ஸ்வீகாரத்தோபாதி ஸ்வகத ஸ்வீகாரத்துக
கும் பலம தப்பாதென்னுமிடம பாரத்வாஜ ஸம்ஹிதையிலும
சொல்லப்பட்டதிறே.

460. அவ —இனிமேல, பரகத ஸ்வீகாரமாகிற பரமோபாயத
துக்கு ப்ரமாணங்கள பலவற்றையும தாம்பிப்பித்தருளுகிறார.

**மூ —460 "நல்ல வென்தோழீ" "மாறிய தானவனை" என்கிற பாட்டுக்களையும், ஸ்தோத்ரத்தில் முடிந்த ஶ்லோகத்தையும், "புரு..ர் மநுஷ்யஃ" என்கிற ஶ்லோகத்தையும், இதுககு ப்ரமாணமாக வநுஸந்திப்பது.**

வ்யா.—(நல்ல வென்தோழீ) என்று துடங்கி. அதாவது - தோழியானவள் இவள்தனக்குப பேறுக் குடலாக நினைத்திருப்பது, அவன்[846] "நதயஜேயம" என்ற வார்த்தையையும, பெரியாழ்வார் வயிற்றிற் பிறப்பையுமாயத்து, இப்போ தவன் வாரத்தை தனக்கு பலியாத மாத்ரத்தைக்கொண்டு இது தனனிலு மதிஶங்கை பண்ணி நின்றாள், இனி இவளெங்ஙனே ஜீவிததுத தலைக்கட்டப்புகுகிறா ளென்று மிழவுதோற்றவிருக்க அவளைப் பார்த்து, என்னிலு மென் னிழவுக்கு நோவுபடும்படி ஸநிக்தையான வென்னுடைய தோழீ; அநந்தஶாயியாய அதஏவ ஸர்வஸமாதபராய் யிருக்கிறவர், அது க்குமேல ஸ்ரீயஃபதிகளாய் ஒருவருக்கு மெட்டவொண்ணாத பெரு மையை யுடையவரா யிருப்பா ரொருவர், தேவயோநியிலே பிறந்து சிறிதளைய நிறக்கையு மன்றிக்கே அவர்க்கும் நமக்கும பாவத

ஸ்நிக்தையான - ஸிநேகிதையான.

பரமாணுக்களோடொக்க வாசிபோருமபடி க்ஷுத்ரரான மநுஷ்யா நாம், ஆனபின்பு நம்மால செய்யலாவதுண்டோ, அவரொரு வார்த்தை முன்பே சொலலிவைததா ரென்றத்தைக கொண்டு நமமால அவரை வளைக்கப்போமோ, அது கிடக்கிடும, நமக்குப பேற்றுக்கு வழியுண்டுகாண, ஸ்ரீவில்லிபுத்தூரிலே யவதரித்த வேறறததை யுடையராய ஸாவ வயாபக வஸ்துவைத தன் திருவுள்ளததிலே யடக்கிக கொணடிருக்கிற பெரியாழ்வார், 847 "ஆசாரய தேவோபவ" என்கிறபடியே நமக்குத தேவரான தமக்குத தேவராயிருக்கிற வவரை ஓரிசையைச் சொல்லி யிசைக்கவுமாம, கிழியை அறுததுவரப பண்ணவுமாம, திருமஞ்ஜநத்தைச சோததுவைத் தழைக்கவுமாம், திருக்குழல் பணியைச சமைத்துவைதத தழைக்கவுமாம, திருவந்திக காப்பிட வழைக்கவுமாம, அன்றிக்கே நான் தமமை முன்னிட்டாபபோலே தமக்கு புருஷகாரமாவாரை முனனிட்டு வரப பண்ணவுமாம், வலலதொரு பரகாரம் வருவித்தாராகில அத்தைக கணடிருக்கக கடவோம், நாம் மேலவிழக கடவோமலலோம என்றுணடாளருளிசசெய்த 848 "நல்லவெனதோழீ" என்கிறபாட்டையும; எமவரனென றபாராதே, தனக்கெதிரியான ஹிரண்யாஸுரனைக் கூரிய திருவுகிராலே, வரபலங்களாலே பூண்கட்டி யிருக்கிற மாாவை பொன்மலை பிளநதாபபோலே யிரண்டுகூறும்படி யநாயாஸேந கிழிததுப பொகட்ட மிடுக்கையுடைய நரஸிம்ஹத்தை, 849 "அந்தியம் போதிலரியுருவாகி யரியை யழித்தவனை-பலலாண்டு-பாடுதும்" என்று - அநநயப்ரயோஜநராய்க் கொண்டு மஙகளாஸாஸநம்பண்ணியிருப்பாரை ஜயிக்குமே, வயாவருததா யிருக்கிற வவர்கள் பக்கலிலே நயஸ்தபரராய அவாகளபிமாநததிலே யொதுஙகி யிருப்பாருடைய ஸுக்ருதம என்று திருமழிசைபபிரான் அருளிசசெய்த 850 "மாறுய தானவனை" என்கிற பாட்டையும்; 851 "அக்ருத்ரிம" என்று துடங்கி, ஸவாபாவிகமாய தேவருடைய பாரப்தமுமாய் போகயமுமான திருவடிகளிலுண்டான பரேமத்தினுடைய வதிஸயததுக கெல்லையிலா யிருப்பாராய, அநதபரேம ப்ரகர்ஷத்துக் கடியான வாதமயாதாத்ம்ய ஜ்ஞாநததை யுடையராய், வித்யையாலும் ஜநமத்தாலும் அடியேனுக்கு பிதாமஹராயிருக்கிற நாதமுநிகளைபபாாத்து, "அடியேனுடைய வ்ருத்தத்தைப் பாராதே ப்ரஸந்நரா யருளவேணும்" என்று பரமாசார்யரான ஆளவந்தா ரருளிசசெய்த வேதாந்த தாதபர்யமான ஸ்தோத்ரத்தில் சரமமான ஸ்லோகத்தை

யும், ஜ்ஞாநமிறக்கைக்கு யோக்யதை யில்லாத பசுபக்ஷிகளாகவுமாம், ஜ்ஞாநயோக்யதையுள்ள மநுஷ்யனாகவுமாம், யாவர் சிலர் பகவத் ஸம்பந்தமே நிரூபகமாம்படி யிருப்பாரொரு ததீயனோடே ஸம்பந்தித் திருக்கிறார்கள், அவர்களந்த வைஷ்ணவனாலே பரப்ய பூமியான பரமபதத்தை ப்ராபிப்பாராக ளென்கையாலே, ஜ்ஞாந முண்டாகவுமாம் இல்லையாகவுமாம் ததீயாபிமாநமே யுத்தாரக மென்னுமிடத்தை ஸுஸ்பஷ்டமாகச் சொல்லுகிற - 852 "பசுர் மநுஷ்ய: பக்ஷீவா யேச வைஷ்ணவ ஸம்ஸ்ரயா: - தேநைவ தே ப்ர யாஸ்யந்தி தத்விஷ்ணோ: பரமம்பதம்" என்கிற பௌராணிக ஸ்லோகத்தையும்; ஆசார்யாபிமாநமாகிற இந்த பரகதஸ்வீகா ரோபாயத்துக்கு ப்ரமாணமாக வநுஸந்திப்ப தென்றபடி.

461. அவ:—கீழ்ச்சொன்ன ப்ரபத்தி நிஷ்டனான வதிகாரிக்கு உபாயாதிகாரத்தில் குறையுண்டாகிலும், அது பாராம லீஸ்வரன கார்யஞ்செய்கைக்குடலாய்க்கொண்டு அவ்வுபாய ஸேஷமாயிருந்துள்ள வாசார்யாபிமாநத்தை இப்போது ஸ்வதந்த்ரோபாயமாகச் சொல்லுவானென், ஒன்றுக்கே உபயாகாரமும் கூடுமோவென்கிற ஸங்கையிலே யருளிச்செய்கிறார் மேல்.

மூ:—461. ஆசார்யாபிமாநந்தான், ப்ரபத்திபோலே உபாயாந்தரங்களுக் கங்கமுமாய் ஸ்வதந்த்ர முமாயிருக்கும்.

வ்யா:—(ஆசார்யாபிமாநந்தான்) என்று தொடங்கி அதாவது - ஆசார்யாபிமாநமாகிற இது தான், 853 "தமேவசாத்யம் புருஷம் ப்ர பத்யே" 854 "தமேவ ஸரணம் கச்ச" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே விரோதி பாபக்ஷயத்துக்கும் பக்திவிவ்ருத்திக்கு முடலாய்க்கொண்டு உபாயாந்தரமான பக்திக்கங்கமுமாய், தத்யாக பூர்வகமாக 196 "மாமேகம் ஸரணம் வ்ரஜ" என்று விதிக்கும்படி இஷ்டாநிஷ்ட ப்ராப்தி பரிஹாரங்க ளிரண்டுக்கும் ஸ்வயமே வோபாயமாய்க்கொண்டு ஸ்வதந்த்ரோபாயமுமா யிருக்கும் ப்ரபத்திபோலே, உபாயாதிகார மாந்த்யத்தைப்பாராது ஈஸ்வர னுபேக்ஷியாமல் கார்யம் செய்கைக் குறுப்பாகையாலே ஸ்வதந்த்ரோபாயமான ப்ரபத்திக்கு ஸாபல்யத்தை யுண்டாக்காநின்றுகொண்டு அவ்வழியாலே யதுக்கங்கமுமாய், அதையொழியத் தன்னையே யுபாயமாகக் கொள்ளுமளவில் அநிஷ்ட நிவ்ருத்யாதிகளுக்குத் தானே யுபாயமாய்க்கொண்டு ஸ்வ

நதரமுமாயிருக்கு மென்கை. அன்றிகே, 855 "அநாசாரயோ பலப தாஹி விதயேயம நயதி தருவம" என்றும 856 "மாஸதராதிஷ் ஸுதருஷ்டாபி, ஸாஙகா ஸஹ பலோதயா - நபாவஸித்யதி வை விதயா விநா ஸதுபதேஸத:" என்றும சொல்லுகையாலே ஏதேனு மொரு வித்யையை யவலமபிககுமவனுக்கும் அதுக்கோ ராசாரயோப தேஸம் வேண்டுகையாலே ஆசாரயாபிமாநம ஸகலோபாயாஙகமா யிருகக, 857 "தேநைவ தே பரயாஸயநதி" என்று ஸ்வதநத்ரோபாய மாகச சொலலுவானென்னென்ன ; (ஆசார்யாபிமாநநதான்) என்று தொடஙகி யருளிசசெய்கிறாராகவுமாம். அதாவது - பரபததிதான் கர்மஜ்ஞாநபகதிகளாகிற உபாயாநதரஙகளுக்கு உதபத்தி விவருத்தி விரோதி பரிஹாரார்த்தமாக விஹிதமாயக்கொண்டு ததஙகமுமாய், 858 "அநநயஸாதயே ஸ்வாபீஷ்டே மஹாவிஸவாஸ பூர்வகம - ததே யோபாயதா யாசநா பரபத்திஸ ஸரணாகதி:" என்கிறபடியே - அந யோபாயஙகளை யொழிநது தன்னையே யுபாயமாகக் கொள்ளுமளவில அநிஷ்ட நிவருத்தி பூாவகேஷட பராபதிக்கு ஸ்வயமேவ நிர்வாஹக மாயக்கொண்டு ஸ்வதநதரமாயிருககு மாபபோலே, ஆசாரயாபிமாந மாகிற விதுதான் ஏதேனுமோருபாயததுககு மாசார்யோபதேஸ மவஸயாபேக்ஷிதமாகையாலே அவவழியாலே யுபாயாநதரங்களுககு அஙகமா யிருநததேயாகிலும், 859 "பாலமூக ஜடாந்தாஸ்ச பங்கவோ பதிராஸ் ததா - ஸதாசார்யேண ஸந்த்ருஷ்டா: பராபநுவநதி பராங்கதிம-யஸமா மநுஷ்ய: பக்ஷீவா" இத்யாதிப்படியே ஸ்வயமே வோததாரகமாகையாலே ஸ்வதநதரோபாயமுமா யிருக்கு மென்கை.

462. அவ---இபபடி ஸ்வதந்த்ரமான விவ்வுபாயத்துக்கு அதிகாரி யின்னாரென் றருளிசசெய்கிறார்.

மூ:---462. பக்தியிலுஸக்தனுக்கு ப்ரபத்தி ; ப்ரபத்தியி லஸக்தனுக் கிது.

வ்யா:---(பக்தியில ஸக்தனுக்கு) என்று தொடஙகி. அதாவது-860 "உபய பரிகாமித ஸ்வாநதஸ்ய" என்கிறபடியே ஜநமாநதர ஸஹஸ்ர ஸிதத கர்ம ஜ்ஞாந ஸம்ஸ்க்ருதாநத:கரணனுககு ஜநிககுமதாய் ஸ்வபாரதநதரய விரோதியான ஸவயதநரூபமா யிருககும பக்த யுபாயத்தில, துஷ்கரத்வ புத்தியாலும் ஸ்வரூப விரோதித்வ புத்தி யாலும் நாமிதுக்கு ஸக்தரல்லோமென்று கைவாங்கினவனுக்கு, நிவ

ருத்தி ஸாத்யதயா ஸாகாமுமாய பகவத் பாரதந்த்ரிய ரூப ஸ்வ ரூபாநுரூபமுமான ப்ரபத்த்யுபாயம்; அத்யவஸாய ஜ்ஞாநரூப மான ப்ரபத்த்யுபாயத்தில் மஹாவிஶ்வாஸ முண்டாகை யரி தாகையாலும், பந்தமோக்ஷங்க ளிரண்டுக்கும் பொதுவான ஈஶ் வர ஸ்வாதந்த்ரிய பயத்தாலும் நாமிதுக்கு ஶக்தரல்லரென்று தேஙகினவனுக்கும் பஶ்வாதிகளுக்கும் கார்யகரமாகையாலே விஶ்வாஸ ஸாபேக்ஷமு மன்றிக்கே மோக்ஷைக ஹேதுவுமா யிருக்கும் பார தந்த்ர ஸ்வரூபனான ஸதாசார்யனுடைய வபிமாநரூபமான விருத் சரமோபாய மெனகை. பக்தியி லஶக்தனுக்கு துஷ்கரத்வ ஸ்வ ரூப விரோதித்வங்க ளிரண்டும் ஹேதுவாகிலும் இவ்விடத்தில் ஸ்வரூப விரோதித்வமே ப்ரதாந ஹேது; ப்ரபத்தியி லஶக்தனுக் கும் விஶ்வாஸமாந்த்ய பகவத் ஸ்வாதந்த்ரியபயரூப ஹேது த்வய முண்டேயாகிலும் பகவத் ஸ்வாதந்த்ரிய பயமே ப்ரதாந ஹேது; (ஸ்வஸ்வாதந்த்ரிய பயத்தாலே பக்தி நழுவிறறு, பகவத் ஸ்வாதந்த் ரிய பயத்தாலே ப்ரபத்தி நழுவிறறு) [444, 445] என்றிறே இவர் தாம் கீழருளிச்செய்தது. இத்தால் - அநந்யோபாயாஶக்ததயா அநந்யகதியானவனே ப்ரபத்த்யதிகாரியாமோபாதி, இவ்வுபாயாதி காரியும் அநந்யோபாயா ஶக்ததயா அநந்யகதியானவ னென்றதாய்த்து. அன்றிக்கே, இதின ஸ்வதந்த்ரத்வத்தை (பக்தியி லஶக்த னுக்கு) இத்யாதியாலே ஸ்திரீகரிக்கிறாராகவுமாம். வாக்யார்த்த யோஜனையில் பேதமில்லை பக்தியி லஶக்தனைக் குறித்து விஹித மான ப்ரபத்த்யுபாயம் ஸ்வதந்த்ரமானாப்போலே; ப்ரபத்தியி லஶக் தனைக் குறித்து விஹிதமானவிதுவும் ஸ்வதந்த்ரமாகக் குறை யில்லையென்று கருத்து.

463. அவ:—இவ்வாசார்யாபிமாந மிவனுக் குண்டாக்கும் பல பரம்பரையை யருளிச்செய்து, இவ்வர்த்தத்தை நிகமித்தருளுகிறார்.

**மூ:—463 இது ப்ரதமம் ஸ்வரூபத்தை பல்லவிதமாக்கும், பின்பு புஷ்பிதமாக்கும், அநந்தரம் பலபர்யந்த மாக்கும்.**

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

வ்யா:—(இது) என்று தொடங்கி. அதாவது - இப்படி கீழ் சொன்ன ஆசார்யாபிமாநமாகிற விது, ப்ரதமத்திலே இச்சேதந னுக்கு ப்ராணவோகத பகவத்நயாஹ ஶேஷத்வத்தை சரமபர்வ

பர்யந்தமாக உணர்த்தி, அநாதிகாலம் ஸ்வாதந்த்ர்யமாகிற அழலிலே மண்டிக் கரிகெழுந்து கிடந்த ஸ்வரூபத்தைத் துளிர்த்தெழும்படியாக்கும்; இப்படி பல்லவிதமான பின்பு, மத்யமபதோக்தாநந்யஶரணத்வத்தை சரமபர்வ பர்யந்தமாக உணர்த்தி, பலஸூசகமான உபாயாத்யவஸாய யோகத்தாலே ஸ்வரூபத்தை புஷ்பிதமாம்படியாக்கும்; இப்படி புஷ்பிதமான வநந்தரம், சரமபதோக்தாநந்ய போகத்வத்தையும் சரமபர்வ பர்யந்தமாக உணர்த்தி, நித்ய கைங்கர்ய போகத்தாலே ஸ்வரூபத்தை பலபர்யந்தமாம்படியாக்கு மென்றபடி. ப்ரதம ரஹஸ்யமான திருமந்த்ரத்தில் பதத்ரய ப்ரதிபாத்யமான வநந்யார்ஹ ஶேஷத்வாத் யாகாரத்ரயமு மாத்மாவுக்கு ஸ்வரூபமாய், அதுதான் சரமபர்வ பர்யந்தமாயிறே யிருப்பது; இவை நா ஞசார்யோபதேஶாதிகளாலே லப்தங்களாகையாலும், அவ்வுபதேஶாதிகளுக்கடி இவன் நம்முடையவனென்கிற வாசார்யாபிமாநமாகையாலும், ஆசார்யாபிமாந மிவற்றை யுண்டாக்கு மென்கிறது. ஆக, இப்படி யிருந்துள்ள பதத்ரயார்த்த நிஷ்டையை இவ்வாசார்யாபிமாந மிவனுக்குண்டாக்கி யுஜ்ஜீவிப்பித்தேவிடும்படி சொல்லிற்றாய்த்து. அதவா, இப்படி ஸ்வதந்த்ரோபாயமான விது இவன் ஸ்வரூபத்தை பர்வக்ரமேண உஜ்ஜீவிப்பிக்குப்படியை ப்ரகாஶிப்பியா நின்றுகொண்டு, இவ்வர்த்தத்தை நிகமித்தருளுகிறார்.

(இது) இத்யாதியாலே. அதாவது - ஆசார்யாபிமாநமாகிற விது, ப்ரதமம் பகவத் விஷயத்திலே யநவயிப்பித்து, அநாதிகாலம் ததநவய ராஹித்யத்தாலே 861 "வாடினேன்" என்னும்படி உறாவிக்கிடந்த ஸ்வரூபத்தை பல்லவிதமாக்கும்; பின்பு, பாகவத விஷயத்திலே யூன்றுவித்து பலாந்வய யோக்யமாக்குகையாலே பல்லவிதமா யிருந்தவத்தை புஷ்பிதமாக்கும்; அநந்தரம், 862 "நின்று தன் புகழேத்த" என்கிறபடியே சரமபர்வத்தில் நிலைபெறுத்தி புஷ்பிதமா யிருந்தவத்தை பலபர்யந்தமாக்கு மென்னவுமாம்.

ஆக, இப்ப்ரகரணத்தால் - ஆசார்யனை யுபாயமாகப் பற்றினார்க்கு பயாபயங்க ளிரண்டும் மாறிமாறி நடக்குமென்னும் ப்ரஸங்கமில்லாமையும், இவ்வர்த்த நிர்ணயக ப்ரமாண மின்னதென்னுமதும், இவ்வர்த்த ஸ்தாபநத்துக்கிடான உபபத்தியும், ஐதிஹ்யமும், இவ்வர்த்தோபபாதநார்த்தமாக ப்ராப்ய நிர்ணயமும், இப்படி ப்ராப்ய நிர்ணயம் பண்ணினால் இதுக்கு ஸத்ருஶமாகவே கொள்ள வேணும் ப்ராபகமென்னுமதும், அல்லாதபோது வரும் தூஷணமும்,

ஈஸ்வர விஷயத்திலிவனுக்குள்ள சரணவத் பாரதந்த்ர்யாநந்யத்வங் களை சூசிப்பித்துக்கொண்டு ஈஸ்வரனைப் பற்றுமதில் இவனைப் பற்றுமதுக்குள்ள விசேஷமும், ஈஸ்வர சேதநர்க ளிருவருர்க்கு மிவனுபகாரக னென்றும், ஈஸ்வரனு மாசைப்படும் பதத்தை யுடையவ னென்றும், இவன்பண்ணு முபகாரத்துக்கு ஸத்ருஸ ப்ரத்யுபகாரமில்லை யென்றும், இவனோட்டை ஸம்பந்தம் மோக்ஷத்துக்கே ஹேதுவா யிருக்கு மென்றும், ஈஸ்வரனை யுபகரித்த விவனிலும் இவனையுபகரித்த வீஸ்வரனே மஹோபகாரகனென்றும், இவ்வாசார்ய வைபவமும், ஆத்மகுணமுண்டானாலு மாசார்ய ஸம்பந்தத்தை நெகிழில் அநர்த்தப்ரயோஜநமும் அவத்யகரமும் ஈஸ்வர நிக்ரஹஹேதுவுமாம்படியும், ஆசார்ய ஸம்பந்த விச்சேதத்தில் பகவத் ஸம்பந்த தௌர்லப்யமும, ஆசார்யாந்வயத்துக்கு பகவத் ஸம்பந்த மபேக்ஷிதமென்னுமதும், ஆசார்யாபிமாநமொழிய உஜ்ஜீவநோபாயமில்லை யென்னுமிடத்தில் ஆப்தோபதேசமும், இவ்வர்த்தத்தினுடைய ஸ்திரீகரணமும், இவ்வாசார்யாபிமாந நிஷ்டனானவன் ஸுலபமான விவ்விஷயத்தைவிட்டு துர்லபமான பகவத் விஷயத்தை ரக்ஷகமாக விச்சிக்கக்கடவனல்லனென்றும், பரத்வாதி ப்ராப்ய ஸ்தலங்களெல்லா மிவ்விஷயமே யென்றிருக்கக்கடவனென்றும், இவனுக்கு ப்ராதிகூல்யாநுகூல்யாநுபய ரின்னாரென்றும், இவனுடைய ஜ்ஞாநாநுஷ்டாநங்களுக்கு விநியோகமும், இவனுக்கு நிஷித்தாநுஷ்டாநமும் விஹிதபோகாதிகளும் த்யாஜ்யமென்னுமிடமும், ஸ்வரூபப்ரச்யுதி வாராமைக்கு வேண்டுமவஸ்தையும், ப்ராப்யபூமி ப்ராவண்யாதித்ரயமு மிவனுக் கவஸ்யாபேக்ஷிதமென்னுமதும், ஆசார்ய விஷயத்தில் ஸ்வகத பரகத ஸ்வீகாரோபாயத்வய ப்ரமாணங்களும், ஆசார்யாபிமாநத்தின் ஸ்வதந்த்ரோபாயத்வமும், தததிகாரி நிர்ணயமும், இவ்வாசார்யாபிமாந மிச்சேதநனுக் குண்டாக்கும் பலபரம்பரையையும் சொல்லுகையாலே, ஸதாசார்யாபிமாநமே ஸர்வர்க்கு முத்தாரக மென்னுமிடமும் சொல்லப்பட்டது.

ஆக, இத்தால் - வாக்ய த்வயோக்தோபாயோபேய சரமாவதியை யருளிச்செய்தாராய்த்து.

பெரியஜீயர் திருவடிகளே ஶரணம்.

ஸம்பூர்ணம்.

---